அகில பாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥



“एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा”

# श्रीजगद्गुरुग्रन्थमाला–८



# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா–8

(ஸ்தோத்திரம்)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்

ஸ்ரீரங்கம்

1962



॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिद्वयी या स्थिता
तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमाला शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमाला सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவின் எட்டாவது மலர் இது ஸ்ரீ சங்கர பகவத்பாதர் அருளிய சிவ ஸ்தோத்திரங்களில் சில ஆருவது மலரில் வெளியாகியுள்ளன. இம்மலரிலும் நான்கு பெரிய சிவ ஸ்தோத்திரங்கள் வெளிவந்துள்ளன. பாக்கி உள்ளவை முழுவதும் பின்னால் ஒரே ஸம்புடத்தில் வெளிவரும்.

இம்மலரில் முதலாவது தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம். மனதில் தியானம் செய்வதற்காக தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபத்தை நன்கு காட்டி, இவரையே ஆதி ஆசார்யாராகக் கூறி, இவரை நேரில் கண்டதாகவும் கூறுகிருர். இரண்டாவது சிவகேசாதி பாதாந்தவர்ணன ஸ்தோத்திரம் கேசம் முதல் பாதம்வரை ஒவ்வொரு அங்கத்தையும் தனித் தனியாக வர்ணிக்கிருர். இதுபோல சிவபாதாதி கேசாந்த வர்ணன ஸ்தோத்திரமும், விஷ்ணுபாதாதி கேசாந்த வர்ணன ஸ்தோத்திரமும் பகவத்பாதர் அருளியது பின்னால் வெளிவரும். தக்ஷிணாமூர்த்தி மந்திரவர்ணமாலா ஸ்தோத்ர மும் பின்னால் வரும். மூன்ருவது மிருத்யுஞ்ஜயமானஸிக பூஜா ஸ்தோத்திரம். இதில், நாம ஸாதாரணமாக பூஜை களில் அனுஷ்டிக்கும் தியானம், ஆவாஹனம் முதலான எல்லா உபசாரங்களையும் விரிவாகக் காணலாம். அந்தந்த உபசாரங்களில் ஸமர்ப்பணம் செய்யவேண்டிய திரவ்யங் களையும், முறைகளையும் நனகு காட்டுகிருர். நான்காவ தான தசசலோகீ ஸ்துதியில் அநேகம் புராணக்கதைகளைக் காட்டி சிவோத்கர்ஷத்தை நிரூபிக்கிருர். ஞானமார்க்கத்தில் 'அவரே நான்' (स एवाहम्) என்ற நிலையில் அவசிஷ்ட மாயும், கேவலமாயும் உள்ள ஒரே சிவதத்வம் நானதான் என்பதை விளக்குகிறது 'தசசலோகீ' என்ற பிரகரணம். இந்த தசசலோகீ ஸ்துதியில் அதே சிவ தத்வத்தை, பரப்ரஹ்மத்தை, ஸகுணமாகவும், ஸாகாரமாகவும், அம்பிகையுடன் கூடியிருப்பதாகவும் காட்டி 'என்னைச

சேர்ந்தவர்' (समेवासौ) என்ற பக்தி மார்க்கத்தில் அவரிடம் மனம் நிலைத்திருக்கும்படி வேண்டுகிறார்.

இந்த ஸ்தோத்திரங்களுக்குத் தமிழில் பதஉரையும், விரிவான கருத்துரையும் எழுதிக்கொடுத்துதவிய பேராசிரியர் ஸ்ரீ A. ஸுப்ரமண்யய்யர் அவர்களுக்கு ஸமிதியின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். மற்ற மலர்களும் விரைவில் மலர்ந்து பக்தர்களின் உள்ளங்களில் பேரானந்தத்தை உண்டாக்குமாறு அருள்செய்ய எல்லாம் வல்ல ஸ்ரீ ஜகத்குருவை வேண்டுவோமாக.

K. V சுப்பரத்னம் அய்யர்,
பொதுக்காரியதரிசி,
அகிலபாரத சங்கரஸேவா ஸமிதி





| | | பக்கம் |
|---|---|---|
| 1. | ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம் | 1 |
| 2. | ஸ்ரீ சிவகேசாதி பாதாந்த வர்ணன ஸ்தோத்திரம் | 23 |
| 3. | ஸ்ரீ மிருத்யுஞ்ஜய மானஸிக பூஜா ஸ்தோத்திரம் | 78 |
| 4. | தசசலோகீஸ்துதி | 116 |

|| श्रीः ||

# || श्रीशिवस्तोत्राणि ||

# ஸ்ரீ சிவ ஸ்தோத்திரங்கள்

ஸ்ரீ சங்கர பகவத்பாதாசார்யாா அருளியவை.

## || श्रीदाक्षिणामूर्तिस्तोत्रम् ||

## ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்திரம்

[ஆசார்யாள் அருளிய தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்திரங்கள் மூன்று. (1) தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்திரம (2) தக்ஷிண மூர்த்தி வாணமாலா ஸ்தோத்திரம் (3) தக்ஷிணமூர்த்தி அஷ்டகம். இவைகளில முதலாவதான தக்ஷிணமூர்த்தி ஸ்தோத்திரம் 19 சுலோகங்கள கொணடது ஆலமரத்தடியில் தெற்கு முகமாக அமாந்து சிந்முத்ரையாலும் மௌனத்தாலும் தத்வ உபதேசம செய்யும ஸ்ரீ ஆதிகுருவான ஸ்ரீ தக்ஷிண மூர்த்தியின் ஸ்வரூபம இதில் நனகு வாணிக்கப்படுகிறது. அர்த்தானுஸந்தானத்துடன் இந்த ஸ்துதியைப் பாராயணம் செய்வதால் இவவுலகில் பொருள், ஆயுள முதலானவற்றைப் பெறுவான். அபஸ்மாரம முதலான ரோகங்கள இவனிடம் நெருங்காது. கடைசியில் தத்வ ஞானமும் ஏறபடும்]

उपासकानां यदुपासनीयमुपात्तवासं वटशाखिमूले ।
तद्धाम दाक्षिण्यजुषा स्वमूर्त्या जागर्तु चित्ते मम बोधरूपम् ॥

உபாஸகாநாம் யதுபாஸநீயம
உபாத்த வாஸம வடஶாகி மூலே ।
தத்தாம தாக்ஷிண்ய ஜுஷா ஸவமூர்த்யா
ஜாகர்த்து சித்தே மம போத ரூபம ॥

**उपासकानां**-உபாஸகர்களுக்கு, **यत्**-எது, **उपासनीयं**-உபாஸிக்கத் தகுந்ததோ, **दाक्षिण्यजुषा**-எது அனுகூலமான தன்மைவாய்ந்த, **स्वमूर्त्या**-தன்னுடைய உருவத்துடன் தக்ஷிணமூர்த்தி ரூபத்துடன்) **वटशाखिमूले**-ஆலமரத்தடியில

उपात्तवासं-வஸித்து வருகின்றதோ, बोधरूपं-எது ஞான ஸ்வரூபமாய் நிலைத்து நிற்கின்றதோ, तत्-அந்த, धाम-ஒளி, मम-என்னுடைய, चित्ते-மனதில், जागर्तु-மிளிரட்டும்.

பரம்பொருள் ஞானஸ்வரூபம். அது தேஜோமயமாய் விளங்குகிறது உருவம், குணம், பெயர் முதலியவைகள் அற்றது. இவ்வாறு விளங்கும் நிர்குண ப்ரம்மத்தை தியானிப்பது மிகவும் கடினம். ஆதலால அபபரம் பொருளே பக்தர்கள்பால பரிவுகாட்டி தத்துவததை விளக்குவதறகாக தக்ஷிணாமூர்த்தியின் உருவைததாஙகி ஆலமரத்தடியில் அமர்நதிருக்கின்றது அமமூாததி மிகுந்த தாக்ஷிணயம் வாய்ந்தது. பக்தர்களின் எண்ணஙகளையறிநது அவர் களுடைய மனதிறகுகந்தவாறு செயலாற்ற வலலது. இவ்வாறு சிறந்த குணகணங்களைப்பெற்று விளங்குவதால உபாஸகர்கள் இதைச சுலபமாக உபாஸிக்கலாம். இம் மூர்த்தி என்மனதில் எப்பொழுதும் பிரகாசிககட்டும்.

பகவானுடைய மூர்த்தியையும் குணஙகளையும் இடை விடாது மனதில நினைபபதுதான் உபாஸனம் என்பது. இதறகுத்தான் தியானம் என்றும் பெயா இவ்வாறு நினைப்பவாகளுககு உபாஸகர்கள் என்று பெயர். பகவானுடைய பலவிதமான மூர்த்திகளில் தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபம ஞானத்தை உபதேசிப்பதற்காக ஏறபட்டது. ஆகையால ஞானத்தை விருமபுபவாகள் ஆலமரத்தடியில் தெற்கு முகமாக வீறறிருககும ஒளிமயமான ஸ்ரீ தக்ஷிணா மூாத்தி ஸ்வரூபததை தியானம செயகிறார்கள பகவத் ஸவரூபம் மனதில நிலைத்திருக்கவேணடுமானால அவருடைய அருள வேணடும. தக்ஷிணாமூாத்தி ஸவரூபம மனதில் நிலைத்திருகக இந்த சுலோகத்தில அவரை பிராாத்திக்கிறார்.

இந்த தக்ஷிணாமூர்த்தி ஸதோத்ரம் உபஜாதி என்ற விருத்ததததில எழுதப்பபட்டுளளது. இதில் இந்த்ரவஜ்ரா, உபேந்த்ரவஜ்ரா என்ற இரணடு விருத்தங்கள் கலந்து ஒன்று சோந்துள்ளன. நிாகுணமான பரமபொருள் பக்தா களைககாக்கும பொருட்டு ஸகுணமான ரூபத்தையெடுத்துக்

கொண்டு தக்ஷிணாமூர்த்தி ஸ்வரூபியாய்க் காட்சியளிக்கின்றது. இவ்விரண்டு ஸ்வரூபங்களையும் வர்ணிப்பதற்கேற்றதான விருத்தம் இங்கு அமைந்திருப்பது மிகவும் உசிதமானது (1)

अद्राक्षमक्षीणदयानिधानमाचार्यमाद्यं वटमूलभागे ।
मौनेन मन्दस्मितभूषितेन महर्षिलोकस्य तमो नुदन्तम् ॥ २ ॥

அத்ராக்ஷமக்ஷீண தயா நிதாநம
ஆசார்யமாத்யம வடமூல பாகே ।
மௌனேன மந்தஸ்மித பூஷிதேந
மஹர்ஷி லோகஸ்ய தமோ நுதந்தம ॥

**अक्षीण** – குறைவற்ற, **दया**–தயைக்கு, **निधानं**–இருப்பிடமாயும், **वटमूलभागे** – ஆலமரத்தடியில், **मन्दस्मित** – புன்முறுவலால், **भूषितेन** – அலங்கரிக்கப்பட்ட, **मौनेन** – மௌனத்தினுல், **महर्षिलोकस्य** – மாமுனிவர்கள் குழாத்தின், **तमः** – அஞ்ஞான இருளை, **नुदन्तं** – நீக்குகின்றவருமான **आद्यं**– முதலாவது, **आचार्यं** – ஆசிரியரான தக்ஷிணாமூர்த்தியை **अद्राक्षम्** – கண்டேன்.

தக்ஷிணாமூர்த்தியான பரமேச்வரன் கருணைக்கடல். அவருடைய கருணை குறைவற்றது. அவர் தன்னை அண்டும் மாமுனிவர்களிடம் இரக்கம் காட்டி ஆலமரத்தடியில் அமர்ந்து அவர்களின் அஞ்ஞானம் என்னும் இருளை நீக்குகின்றார். அவர் தான் முதலாவது குருமூர்த்தி. அவர் தம் சீடர்களான மாமுனிவர்களுக்கு ஞானத்தை உபதேசிக்கும் முறை ஒப்பற்றது. அவர் வாய்திறவாமல் மௌனத்தை அனுஷ்டிக்கின்றார். அவருடைய முகத்தில் புன்முறுவல் திகழ்கின்றது. இவற்றின் ஒளியாலேயே முனிவர்களின் உள்ளத்தில் குடிகொண்டுள்ள அக்ஞான இருள் நீங்கி விடுகின்றது. அப்பொழுது அவர்கள் பரமேச்வரனுடைய உண்மையை உணர்கின்றனர்.

முதல சுலோகத்தில ஸ்ரீபகவத்பாதர் தக்ஷிணாமூர்த்தியான பரமேசவரன என் அகக்கண முன் தோன்றவேணடுமென வேணடுகிறார். அவருடைய பக்திப்பெருக்கால கட்டுணட கருணாமூாததியும அவர்முன் அககணமே காட்சியளிககின்றார். இதையே பகவதபாதா अद्राक्षं (கண்டேன்) என்று கூறுகிறார்

இதனால பக்தாகள் மனம் உவந்து குருமூர்த்தியை வழிபடுவராயின் தயாபரனான அவரும அவர்கள முன் தோன்றி அவாகளுககுத் தததுவத்தை உபதேசித்து அவாகளைக் காத்தருளவார் என்று நன்கு விளங்குகின்றது.

विद्रावितोशेषतमोगणेन मुद्राविशेषेण मुहुर्मुनीनाम् ।
निरस्य मायां दयया विधत्ते देवो महांस्तत्वमसीति बोधम् ॥

வித்ராவிதாசேஷ தமோ கணேன
முத்ரா விசேஷேண முஹுர் முநீநாம் ।
நிரஸ்ய மாயாம் தயயா விதததே
தேவோ மஹான் தததவமஸீதி போதம் ॥

**महान् देवः**–மஹாதேவா, **दयया**–இரககத்தால, **विद्रावित**–துரத்தப்பட்ட, **अशेष**-மீதமற்ற, **तमोगणेन**-இருள் கூட்டததை உடைய, **मुद्राविशेषेण**–சிறநத ஞான முத்திரையால், **मुहुः**–அடிக்கடி, **मुनीनां**–முனிவர்களுடைய, **मायां**–மாயையை, **निरस्य**–நீக்கி, **तत्वमसि इति**–அது தான் நீ என்ற, **बोधं**–ஞானத்தை, **विधत्ते**–அளிக்கின்றாா.

தக்ஷிணா மூர்த்தியே பெருமை வாய்ந்த பரம்பொருள். அவா பக்தாகளிடம பரிவு காடடும் தன்மை பெறறவர். அவர்களது உளளஙகளில ஊன்றி நிறகும் அஞ்ஞான மெனும் இருளை நீகக அவா சின்முத்திரையுடன் விளங்குகின்றாா. கட்டை விரலையும் ஆள காட்டி விரலையும் ஒன்றாகச் சோத்துக காட்டும் அடையாளத்திறகுச சின் முத்திரை என்று பெயர். இது ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றே என்ற ஜீவப்ரம்மைக்யமெனும் தத்து

வத்தைப் புலப்படுத்துகின்றது இவ்வாறு இருப்பினும மககள் இதை அறிவதிலலை. ஏனெனில மாயை எனும ஓர் இருள உணமையின் ஸவருபத்தை மறைத்து விடுகின்றது. ஆனால தக்ஷிணாமூர்த்தியின் சின்முத்திரை மாயை எனும திரையை விலககித் தத்துவமஸி என்ற ஞானத்தை உபதேசிககின்றது.

தத்துவமஸி என்பது உப நிஷத்துக்களில கூறப்பட்ட ஓர் மஹா வாக்யம இதில தத் என்ற பதம் ஈசவரனைக் குறிக்கின்றது. அவன் தான் இவவுலகைப் படைத்துக காத்துக் கடைசியாகத தனககுள்ளேயே லயமடையச செயயும் ஆறறல பெறறவன். ஞான ஸவரூபியும அவனே. அவன தான அழிவறறவனுயும எஙகும் நிறைநதவனுயும் விளங்குகின்றான். இரண்டாவதான த்வம் எனற பதத் திறகு ஜீவன் என்று பொருள. இநத ஜீவன் அலப அறி வுளளவன் இவன் பலவிதமான தோறறஙகளைப பெறுகி ருன். இவன் அஞ்ஞானமென்ற உபாதியையுடையவன். அதனால தான் இவன் தான் சுகத்தை அடைவதாயும் துக் கததை அடைவதாயும் எணணுகின்ருன். நன்கு பரிசோ தித்துப் பார்க்கும் பொழுது ஜீவனும், ஈசுவரனும் ஒன்று தான் என்ற ஞானம் உண்டாகும். இந்த ஜீவனும் ஈசுவ ரனும் ஒனறே என்ற உண்மையை அஸி என்ற பதம் எடுத்துக் காட்டுகின்றது. (3)

अपारकारुण्यसुधातरङ्गैरपाङ्गपातैरवलोकयन्तम् ।
कठोरसंसारनिदाघतप्तान्मुनीनहं नौमि गुरुं गुरूणाम् ॥४॥

அபார காருணய ஸுதா தரங்கை -
ரபாங்க பாதை ரவலோகயநதம ।
கடோர ஸம்ஸார நிதாக தப்தான்
முநீநஹம நௌமி குரும குரூணாம ॥

अपार–எலலையறற, कारुण्य-கருணையாகிய, सुधा-அமுதத் தின், तरङ्गैः–அலைகளையுடைய, अपाङ्गपातैः–கடைககண பார்வைகளால், कठोर-கடுமையான, संसारनिदाघ-ஸம்ஸார

மெனும் வெப்பத்தால, तप्तान्-தாபத்தை அடைந்த, मुनीन्-முனிவர்களை, अवलोकयन्तम्-பார்ககின்றவரும், गुरूणां-குருக களுக்கெலலாம், गुरुं-குருவான தக்ஷிணாமூர்ததியை, अहं-நான், नौमि-வணங்குகிறேன்.

தக்ஷிணாமூர்த்தியானவர் மிகுந்த இரக்கம் உள்ளவர். வாழ்ககையின் இன்னலகளில சிககுணடு தவிககும் மக்க ளின் துயரை நீககுவதறகாக அவா தம கடைககண் பாாவை களை அவாகள்மீது செலுத்துகினறுர். அவைகளினின்று எல்லையறற அமுத மயமான ஒளிகள அலை அலையாகக் கிளம்பித் துயா படும் பகதாகள்பால படிகின்றன. அதனுல அவர்களுடைய மூனறு வகையான தாபஙகளும நீங்கி விடுகின்றன இவ்விதம் அவரது கடாக்ஷ வீக்ஷணத் திறகுப் பாத்திரமான மாமுனிவாகள ஆனந்தாமுதக கடலில ஆழ்நது மூழகி விடுகின்றனர் தக்ஷிணாமூர்த்தி தான் ஆதி குரு அவரே ஜீவப்ரமமைகயத்தை உபதேசித் தவா. அவரிடமிருந்தே மறற ஆசாாயர்கள தோன்றி யுள்ளனர். ஆதலால நான் அவரது திருவடிகளைப் பணி கின்றேன். (4)

ममाद्यदेवो वटमूलवासी कृपाविशेषात्कृतसंनिधानः ।
ओंकाररूपामुपदिश्य विद्यां आविद्यकध्वान्तमपाकरोतु ॥

மமாத்ய தேவோ வடமூல வாஸீ
கருபா விஶேஷாத் க்ருத ஸநநிதான : |
ஓம்கார ரூபாமுபதிசய விதயாம்
ஆவிதயக தவாநதமபாகரோது ||

आद्यदेवः-முழுமுதறகடவுளான, वटमूलवासी-ஆலமரத் தடியில வஸிக்கும தக்ஷிணாமூர்த்தி, कृपाविशेषात्-சிறந்த கருணையால், कृतसंनिधानः-என்முன் தோன்றியவராய், ओंकाररूपां-ஓமகார ரூபமாகிய, विद्यां-பிரமம விதயையை, उपदिश्य-கற்றுககொடுத்து, मम-என்னுடைய, आविद्यकध्वान्तं-அஞ்ஞானத்தால் உண்டாகும் இருளை, अपाकरोतु-நீக்கட்டும்.

தக்ஷிணமூர்த்தி தான் ஆதியான பரம்பொருள். அவர் தென் திசையை நோக்கிய வண்ணம் அமர்ந்திருத்தலால் தக்ஷிணமூர்தத்தி யென்று அழைக்கப்படுகின்றார். தன்னை அண்டும் பக்தர்கள அனைவருககும் ஆ த ம ஞானத்தைப் புகட்டி அவர்களைக் கடைததேற்றுவதற்காகவே அவர் ஆல மரததடியில அமாநதுள்ளார். அவர் பக்தாகளிடம் கருணை காட்டும் வளளல நினைதத மாத்திரத்திலேயே அவர்களுடை ய அககககண முன தோனறி ஓமகாரமெனும் வித்யையை உபதேசிதது உள்ளத்துறையும் அஞ்ஞான மெனும் இருளை நீககி அவாகளை ஆடகொள்ளும் ஆற்றல பெற்றவர் இவ்வாறு பரம கருணாமூாத்தியாய விளஙகும் தக்ஷிணமூர்த்தி என் முன் தோன்றி பிரணவ விதயையை உபதேசிதது அஞ்ஞானத்தையும் அகறற வேணடுமென பரமாசார்யார் வேணடுகின்றா. (5)

कलाभिरिन्दोरिव कल्पिताङ्गं मुक्ताकलापैरिव बद्धमूर्तिम् ।
आलोकये देशिकमप्रमेयमनाद्यविद्यातिमिरप्रभातम् ॥ ६ ॥

கலாபிரிந்தோரிவ கலபிதாஙகம்
முக்தா கலாபைரிவ பத்த மூர்த்திம் ।
ஆலோகயே தேஶிக மபரமேயம
அநாத்யவித்யா திமிர ப்ரபாதம் ॥

इन्दोः -சந்திரனுடைய, कलाभिः -கலைகளால, कल्पित- அமைககப்படட, अङ्ग इव-உறுபபுக்களையுடையவர்போலவும் मुक्ताकलापैः-நல முததுககளின வரிசைகளால, बद्धमूर्ति इव- கடடப்பட்ட தேஹத்தையுடையவர்போலவும் अप्रमेयम्- மதிப்பிற்கெட்டாதவராயும், अनाद्यविद्या-ஆதியற்ற அஞ்ஞானமாகிய, तिमिर-இருட்டிற்கு, प्रभातम् -காலைவேளையாகவும் விளங்குகின்ற, देशिकं-குருவை, आलोकये- காண்கின்றேன்

தக்ஷிணமூர்த்தியின் திருமேனி மிகவும் பொலிவு பெற்று விளங்குகின்றது. அவருடைய அங்கங்கள் சநதிரனுடைய கலைகளைககொண்டு அமைக்கப்பட்டவைபோல்

அனைவரது உள்ளங்களையும் மகிழ்விக்கின்றன. அவரது உடல் கட்டழகு வாய்ந்தது. அது அழகிய நல்முத்துக்க ளால் ஆக்கப்பட்டது போல லாவண்யத்துடன் பிரகாசிக் கின்றது அவரே பரம்பொருளாகத் திகழ்வதால் அவரது ஸ்வரூபத்தை அறிவது மிகவும அரிது ஏனெனில் அவர் அளவு கடந்தவா. அவா பரஞ்ஜ்யோதியாய் வீற்றிருப்ப தால அவரைப் பாாத்த மாத்திரத்திலேயே அஞ்ஞானம் என்ற இருள் நீங்கி ஆத்ம ஞானத்தைப் பெற்று அனைவரும் ஆத்ம ஸாக்ஷாதகாரம அடைகின்றனா. ஆதலால் அவரை இருட்டை நீக்கும காலை வேளை என்று பகவத்பாதர் உருவ கப்படுத்திக் கூறுகின்றார். இவ்வாறு தோன்றும் பரம் பொருளை நான் காண்கின்றேன் என்று அவா தன்னுடைய அனுபவத்தை எடுத்துக காட்டுகின்றார் (6)

स्वदक्षजानुस्थितवामपादं पादोदरालंकृतयोगपट्टम् ।
अपस्मृतेराहितपादमङ्गे प्रणौमि देवं प्रणिधानवन्तम् ॥

ஸ்வதக்ஷ ஜாநு ஸ்தித வாம பாதம்
பாதோதராலங்க்ருத யோக பட்டம் ।
அபஸ்ம்ருதே ராஹித பாத மங்கே
ப்ரணௌமி தேவம் ப்ரணிதாநவந்தம் ॥

**स्वदक्षजानु**–தன்னுடைய வலது முழங்காலில், **स्थित**–வைக்கப்பட்ட, **वामपादं**-இடது காலையுடையவராயும், **पादोदर**–பாம்பினால, **अलंकृत**–அழகுபடுத்தப்பட்ட, **योगपट्टं**–யோக பட்டத்தையுடையவராயும், **अपस्मृतेः**–அபஸ்மாரம் என்ற அஸுரனின், **अङ्गे**–உடலில, **आहितपादं**–வைக்கப்பட்ட காலை யுடையவராயும், **प्रणिधानवन्तं**–மனதை ஒருநிலைப்படுத்திய வராயுமுள்ள, **देवं**–கடவுளை, **प्रणौमि**–நன்கு வணங்குகிறேன்.

தக்ஷிணாமூர்த்தியானவர் தனது இடது காலை வலது காலின் மீது போட்டுக கொண்டு அமர்ந்திருக்கின்றார். அவர் யோகாஸனத்தில் வீற்றிருக்கும் சமயம் பாம்பு அவரது யோக பட்டமாக விளங்குகின்றது யோக பட்ட மென்பது முழங்காலையும் முதுகையும் வளைத்துக் கட்டும்

ஆடை. இவ்வாறு தம் மனதை ஓர் நிலைப்படுத்திய ஞான ஒளியான பரமபொருள் அபஸ்மாரம் என்னும் அஸுரனின் உடலில பாதத்தை வைத்துக கொண்டிருக்கிறார் அதாவது படுத்துக் கொண்டிருககும் அவன் எழுந்திருக்க முடியாத படி காலால அமிழத்திக் கொண்டிருக்கிறா. ஸ்ரீ தக்ஷிணா மூாத்தியின் அருள நமககு இருந்தால அபஸமாரமமுதலான ரோகங்கள் நம்மிடம நெருஙகாது எனபதை இது காட்டு கிறது இவவாறு விளஙகும பரமயோகியான தக்ஷிணா மூாததியை நாம வணஙக வேண்டும். (7)

तत्वार्थमन्तेवसतामृषीणां युवापि यः सन्नुपदेष्टुमीष्टे ।
प्रणौमि तं प्राक्तनपुण्यजालैराचार्यमाश्चर्यगुणाधिवासम् ॥

தத்வார்த்த மந்தே வஸதாம் ருஷீணாம்
யுவாபி ய: ஸநநுபதேஷ்டு மீஷ்டே ।
ப்ரணௌமி தம் ப்ராகதந புணய ஜாலை·
ஆசார்ய மாஶ்சர்ய குணாதி வாஸம் ॥

**यः**-எந்த தக்ஷிணாமூர்த்தி, **युवा अपि सन्**-இளைஞராக இருப்பினும், **अन्तेवसताम्**-தன அருகாமையில அமாந்திருக் கும் சீடாகளான, **ऋषीणां**-(விருத்தாகளான) மாமுனிவா கட்கு, **तत्वार्थं**-ஆன்ம ஞானத்தை, **उपदेष्टुं**-கற்றுககொடுப் பதற்கு, **ईष्टे**-வல்லமைபெற்று விளஙகுகினறாரோ, **प्राक्तनपुण्य-जालैः**-முன்பிறவிகளில செய்த நலவினைகளின் பெருககால, **आचार्यं**-எனது ஆசிரியராய அமைந்தவரும், **आश्चर्यगुणाधि-वासम्**-வியப்பை உணடாககும குணஙகளின உறைவிட மான, **तं**-அநத தக்ஷிணாமூாத்தியை, **प्रणौमि**-வணஙகு கிறேன்.

தக்ஷிணாமூாத்தியானவா சிறிய தோறறத்தையுடைய வராய் ஆலமரததடியில அமர்ந்திருககிறா அவா சீரிய குணங்கள் படைததவர். அவருடைய குணங்கள் அனை வருககும் மிகக வியப்பை அளிக்கின்றன. அவா வாலிப ராக இருப்பினும் வயது முதிர்ந்த மாமுனிவாகளகூட ஆன்ம அறிவைப் பெற அவரையே நாடிச செலகின்றனர்.

அவ்வனைவருக்கும் அவர் உண்மைப் பொருளான ஜீவப்ரஹ்மைக்யத்தை வாய் திறவாமலேயே சின் முத்திரையால் விளக்கிக் காட்டுகின்றார். சிறுவன் பெரியோர்களுக்கு உபதேசிப்பதும், வாய் திறவாமல் மௌனியாகப் பாடம் சொலவதும் எங்கும் காணாத அதிசயம். இதை தக்ஷிணாமூர்த்தியிடம் காணலாம்.

**चित्रं वटतरोर्मूले वृद्धाः शिष्या गुरुर्युवा ।**
**गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ॥**

அவரைக் குருவாகப் பெற அநேகபுண்ய கர்மாக்களைச் செய்திருக்க வேண்டும் **सतां सद्भिः संगः कथमपि पुण्येन भवति** என்பது சான்றோா வாக்கு. அதாவது நலலவர்களுக்கு நன்மக்களின் சேர்க்கை ஏதோ புணய வசத்தால தான் ஏற்படுகிறது இங்கு பரமாசாாயர் தனககுப் பூர்வ ஜன்மங்களில செய்த நலவினைகளின் பயனால் தான் இவ்வாறு சிறப்புடன் விளஙகும் ஆசிரியர் கிடைத்திருக்கிறார் எனக் கூறுகின்றார். இப்படிப்பட்ட தக்ஷிணாமூர்த்தியை நாம் அனுதினமும் வணங்க வேண்டும். (8)

**एकेन मुद्रां परशुं करेण करेण चान्येन मृगं दधानः ।**
**स्वजानुविन्यस्तकरः पुरस्तादाचार्यचूडामणिराविरस्तु ॥ ९ ॥**

ஏகேந முத்ராம் பரஶும் கரேண
கரேண சான்யேந ம்ருகம் தநாந :।
ஸ்வஜாநு விந்யஸ்த கர : புரஸதாத்
ஆசாாய சூடாமணி ராவிரஸ்து ॥

**एकेन करेण**–ஒரு கையினால, **मुद्रां**–சின்முத்திரையையும், **अन्येन करेण**–மற்றொரு கையினால், **परशुं**–கோடாரியையும், **अन्येन करेण**–மற்றுமோர் கையினால, **मृगं**–மானையும், **दधानः**–தரித்துக்கொண்டிருககின்றவராயும், **स्वजानु**–தன்னுடைய முழங்காலில, **विन्यस्तकरः**–வைககப்பட்ட கையையுடையவருமான, **आचार्यचूडामणिः**–ஆசார்யர்களுக்குள் சிறந்து

விளங்கும் ரத்னமான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி, **पुरस्तात्**-முன்னால, **आविरस्तु**-தோன்றட்டும்.

ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி தன்னை அண்டும பக்தாகளுககு ஞானோபதேசம செயவதறகாகத் தன்னுடைய கைகளில் ஒன்றில சின் முததிரையை வைத்துககொண்டிருககிறாா. கட்டை விரலையும ஆள காட்டி விரலையும் சோத்துக் காட்டும் அடையாளம் சின் முத்திரை எனப்படுகின்றது இநத சின்முத்திரை ஜீவனும பிரமமமும் ஒனறுதான என்பதைக காட்டுகின்றது இநத ஞானத்தைப் பெறறவன் பிறவித துன்பத்திலிருநது விடுபடடு பிரமம ஸாக்ஷாதகாரம் அடைகிறான். இதறகு இடையூறாக இருபபது அஞ்ஞானம். இதைப் போக்குவதற்கு அடையாளமாகத தன் கையில கோடாலியை வைத்துககொணடிருக்கிறாா. அடர்நத காட்டினுள இருள சூழநதிருககும செடி கொடி முதலியவறறை வெட்டி எறிநதாலதான் அங்கு வெளிசசம வரும வெளிசசம வநதவுடனே இருள நீஙகும். அதுபோல் அஞ்ஞானமென்ற இருளையும அதன் காரயமான காமம் முதலியவற்றையும் அகறறுவதன் நிமிததமாக கோடாலி விளங்குகின்றது. ஸ்ரீதக்ஷிணாமூாத்தி இவவாறு தன்னிடம் வரும பகதர்களைக காக்கின்றாா. காமம, க்ரோதம் முதலியவை மிருகஙகளின் ஸ்வபாவகுணஙகள். ஒரு கையில மானை வைத்துக் கொணடிருப்பது காமாதிகளை அடககி இருபபதைக் காட்டுகிறது. அவா அருள இருந்தால நம்மையும காமாதிகள் துன்புறுததாது. அவா யோகாஸனத்தில அமர்நதிருப்பதால ஓா கையை முழஙகாலில வைததுககொணடிருககிறாா். எப்பொழுதும் அணடியவாகளைப் காப்பதறகாக அவா தயானததில ஆழநதுளளாா. இவவாறான ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி என்முன் தோன்றட்டும. (9)

**आलेपवन्तं मदनाङ्गभूत्या शार्दूलकृत्त्या परिधानवन्तम् ।**
**आलोकये कश्चन देशिकेन्द्रमज्ञानवाराकरवाडवाग्निम् ॥ १० ॥**

ஆலேபவந்தம் மதநாங்க பூத்யா
ஶார்தூலக்ருத்யா பரிதாநவந்தம் ।

ஆலோகயே கஞ்சந தேஶிகேந்த்ரம
அஞ்ஞான வாராகர பாடவாகநிம் ॥

**मदनाङ्गभूत्या**-மன்மதனுடைய உடலின திருநீறுல, **आलेपवन्तम्**-பூசசுககளை உடையவரும, **शार्दूलकृत्त्या**-புலித் தோலால, **परिधानवन्तं**-ஆடையணிந்தவரும், **अज्ञानवाराकर-वाडवाग्नि**-அஞ்ஞானமென்னும கடலினுள காணும படபாகனி யாகத்தோன்றுபவருமான, **कञ्चन**-ஓா, **देशिकेन्द्रम्**-ஆசிரியப் பெருமானை, **आलोकये**-காண்கின்றேன.

இஙகு பகவதபாதா ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தியின் ஸாக்ஷாதகாரததை விளககுகிருர். முன் சுலோகத்தில தக்ஷிணுமூர்த்தி என் கண முன தோன்ற வேணடுமெனறு வேணட உடனே அவா பகவதபாதரின் கண முன் காட்சி அளிககின்ருா. அவரது திருமேனியின் திருககோலம் இங்கு காட்டபபடுகினறது முனை ஒரு சமயம் சிவபெருமான இமயமலேச சாரலில தவம செயயுமபொழுது காமன் அவரது தவததைக கலேககத தனது மலாக கணையை எயதான் அதனுல சினமுற்ற சிவபெருமான் தன் நெறறிக் கணணில் கிளமபிய தீயால காமனின உடலே எரிததுச் சாம்பலாககினுா. அசசாம்பலேயே தம் உடல முழுவதும் பூசிக கொணடாா அசசிவபெருமானே தக்ஷிணுமூர்த் தியாய்த தோறறம தருதலால அவா தனது மேனியை அநதச சாம்பல பூசசினுல அலஙகரித்துக கொணடிருககிருர் என்று கூறுகிருா. இதனுல அவா தனது பகதர்களின் உள்ளததெழும காமககனலேககளைநது அவாகளை ததூய்மை வாயநதவாகளாகச செய்ய வலலவர் எனபது நன்கு விளங்கு கின்றது. மேலும அவா தம் உடலேப் புலித் தோலால் அலஙகரிததுக் கொண்டிருககின்ருா. புலி இயறகையிலேயே எப்பொழுதும கோபம குடி கொண்டுளளது. அதன் தோலே உரித்து ஆடையாகக கடடிக் கொணடுள்ளாா என்று கூறுவது கோபததை அடக்கியிருப்பதைக காட்டு கிறது ஆகவே தக்ஷிணுமூர்ததியின அருள பெறறவர் களுககு காமம், கரோதம இரண்டும் விலகிவிடும். உலகில எலலாத் துன்பங்களுக்கும் இவ்விரண்டுமே மூல காரணம்.

ஆனால் அஞ்ஞானம் என்ற இருள் அகத்தில் இருக்கும் வரை எப்பொழுதாவது காம க்ரோதங்கள் தலையைக்காட்டலாம். அதற்காக अज्ञानवाराकरवाडवाग्नि என்று அப்பெருமானை இங்கு வாணிக்கின்றார். அஞ்ஞானமென்பது ஓர் பெருங்கடல். அதற்கு எல்லை கிடையாது. ஆழம் கண்டு பிடிப்பதும் அரிது. ஆனால் அதற்குள் தோன்றும் பாடவாக்னி அக்கடலையே எரித்து அழித்து விடுகின்றது. இவ்வாறு அஞ்ஞானம் நீங்கியவுடன் தானாகவே ஸ்வயஞ்ஜோதி மயமான பெருமான் அகக்கண்முன் தோன்றுகின்றார். அதனால் மோக்ஷ சாம்ராஜ்யம் கிட்டுகின்றது. இதற்குச் சிறந்த வழிகாட்டியாகத் தோன்றுபவர் ஸாக்ஷாத் தக்ஷிணமூர்த்தியே. அவரை யான் இங்கு காணகின்றேன்.

चारुस्मितं सोमकलावतंसं वीणाधरं व्यक्तजटाकलापम् ।
उपासते केचन योगिनस्त्वामुपात्तनादानुभवप्रमोदम् ॥ ११ ॥

சாருஸ்மிதம் ஸோமகலாவதம்ஸம்
வீணாதரம் வ்யக்தஜடாகலாபம் ।
உபாஸதே கேசந யோகிநஸ்த்வா
முபாத்த நாதானுபவபரமோதம் ॥

**चारुस्मितं**–அழகிய புன்முறுவலையுடையவரும், **सोमकलावतंसं**–சந்திர கலையை ஆபரணமாகக்கொண்டவரும், **वीणाधरं**–வீணையைக் கையிலேந்தியவரும், **व्यक्तजटाकलापं**–விரிந்த சடைக்கூட்டத்தையுடையவரும், **उपात्तनादानुभवप्रमोदं**–அடையப்பட்ட இன்னிசை நுகர்ச்சியின் மகிழ்ச்சியை உடையவருமான, **त्वां**–உம்மை, **केचन**–சில **योगिनः**-யோகிகள் **उपासते**–உபாஸிக்கின்றனர்.

இங்கு வீணா தக்ஷிணமூர்த்தியின் உபாஸனை கூறப்படுகிறது. அவர் முகத்தில் அகமகிழ்வின் சின்னமாய புன்முறுவல் பூத்துக் காணப்படுகின்றது. அவரது சடைமுடியில் காணப்படும் சந்திரகலை அவரது முகத்தை மிகவும் பொலிவுபெறச் செய்கின்றது. அவர் தனது திருக்கரத்தில் வீணையைத் தாங்கி இன்னிசைகளை எழுப்பிக்கொண்டிருக்

கிருர். அவர் ஜடைகளை தரித்துக்கொண்டிருககிருர். அவர் வீணையின் இனிய நாததததை அனுபவித்து ஆனநதமடை கின்ருா. இவவாருக ஆநந்த மூாத்தியான தக்ஷிணு மூர்த்தியை உபாஸிககும யோகிகள் அநாஹத சகரத்தில எழும் இன்னிசையைக்கேட்டு ஆனநதவெள்ளததில ஆழகினறனர்.

தக்ஷிணுமூர்த்தி, யோகதக்ஷிணுமூாத்தி, வீணுதக்ஷிணு மூர்த்தி என்று மூன்று ரூபங்கள உணடு. தக்ஷிணுமூாத்தி யாக இருநது வேதாநத தததவஞானத்தை உபதேசித்தாா. யோகமுறைகளை அனுஷ்டித்துக் காணபித்த நிலைககு யோக தக்ஷிணுமூாத்தி என்று பெயா. நாரதாதிகளுக்கு வீணை வாசித்துக்காட்டிய நிலைககு வீணுதக்ஷிணுமூர்ததி என்று பெயா. (11)

**उपासते यं मुनयः शुकाद्याः निराशिषो निर्ममताधिवासाः ।**
**तं दक्षिणामूर्तितनुं महेशं उपास्महे मोहमहार्तिशान्त्यै ॥ १२ ॥**

உபாஸதே யம் முநய: ஶுகாதயா:
நிராஶிஷ: நிர்மமதாதிவாஸா: ।
தம் தக்ஷிணுமூாததிதநும் மஹேஶம்
உபாஸமஹே மோஹமஹாாததி ஶாநத்யை ॥

**यं**-எவரை, **शुकाद्याः**-சுகா முதலிய, **मुनयः**-முனிவர்கள், **निराशिषः**-பற்றறறவர்களாயும், **निर्ममताधिवासाः**-கர்வத் திற்கு இடம் கொடாதவர்களாகவும் இருந்துகொண்டு, **उपासते**-உபாசிக்கின்ருர்களோ, **तं**-அநத, **दक्षिणामूर्तितनुं**- தக்ஷிணுமூர்த்தியின் உருவந்தாஙகிய, **महेशं**-பரமேஶவரனை, **मोहमहार्तिशान्त्यै**-மோகமென்ற பெரும் துன்பம் நீங்குவதற் காக, **उपास्महे**-பஜிககின்ருேம்.

பரமேஶவரனை சுகர் முதலிய மகரிஷிகள உபாசிக்கின் றனர். அவர்களுக்கு மோஹம் இல்லை. அவாகள அனை வரும் ஒரு பொருளிலும் ஆசை இலலாதவர்கள. அவர்கள் தங்களுடைய உள்ளத்தில் அகங்கார மமகாரங்களுக்கு

இடம் கொடாதவர்கள். அவர்கள் பரமேச்வரனை அனவரதமும் உபாஸிப்பதால பரமானந்தத்தைப் பெற்று மகிழ்கின்றனர்

நமககோ, மோஹம், ஆசை, அஹங்காரம், இவை இன்னும் நீஙகவிலலை. இவைகளால் ஏறபடும் துன்பங்களை அனுபவித்துக் கொண்டிருககிறோம் பரமேசனின் அருள் கிடைத்தால தான் இவை நம்மை விட்டு விலகும் மோஹம் முதலியவை நீஙகுவதற்காக தக்ஷிணாமூர்த்தியை உபாஸிப்போம் ஆசை, காவம் முதலியவை இலலாத சுகாதிமுனிவர்களே அவரை உபாஸிககும் பொழுது நாம் உபாஸிக்க வேண்டும் என்பதைச சொலலவும் வேண்டுமா ? (12)

कान्त्या निन्दितकुन्दकन्दलवपुर्न्यग्रोधमूले वस-
न्कारुण्यामृतवारिभिर्मुनिजनं सम्भावयन्वीक्षितैः ।
मोहध्वान्तविभेदनं विरचयन्बोधेन तत्तादृशा
देवस्तत्वमसीति बोधयतु मां मुद्रावता पाणिना ॥ १३ ॥

காந்த்யா நிந்தித குந்த கந்தல வபுர் ந்யக்ரோதமூலே வஸன்
காருண்யாம்ருதவாரிபிர் முனிஜநம்
ஸம்பாவயன் வீக்ஷிதை : ।
மோஹத்வாந்த விபேதனம் விரசயன் போதேந
தத்தாத்ருஶா
தேவஸ்தத்வமஸீதி போதயது மாம்
முத்ராவதா பாணிநா ॥

**कान्त्या**-அழகினால், **निन्दित**-பழிக்கப்பட்ட, **कुन्दकन्दलवपुः**-புதியமல்லி அரும்பை உடைய சரீரமுள்ளவரும் **न्यग्रोधमूले**-ஆலமரத்தடியில், **वसन्**-வஸித்துக்கொண்டு, **कारुण्यामृतवारिभिः**-தயை என்னும் அமுதநீர் நிரம்பிய, **वीक्षितैः**-பார்வைகளால், **मुनिजनं**-முனிவர்களை, **सम्भावयन्**-அருளிக்கொண்டும், **तत्तादृशा**-அப்படிப்பட்ட, **बोधेन**-ஆத்ம ஞானத்தால், **मोहध्वान्तविभेदनं**-மோஹமெனும் இருட்டைப் பிளத்தலை, **विरचयन्**-செய்துகொண்டும்இருக்கிற, **देवः**-தக்ஷிணா

மூர்த்தி, **मुद्रावता**-சின் முத்திரையுடன்கூடிய, **पाणिना**-கையால் **मां**-என்னை, **तत्वमसि**-நீ பரம்பொருளாய் இருக்கிறாய், **इति**-என்று, **बोधयतु**-அறிவுபெறச் செய்யட்டும்.

தக்ஷிணாமூர்த்தி மிகுந்த அழகு வாய்ந்தவர். அவரது திருமேனியின் காந்தி வெண்ணிறம் பொருந்திய மல்லிகையை இகழும் தன்மை வாய்ந்தது. அவர் தன்னைச் சாரும் மாமுனிவர்கள் அனைவரையும் பாராட்டிக்கொண்டு ஆலமரத்தடியில் அமர்ந்திருக்கின்றார் இரக்கத்துடன்கூடிய அவரது பார்வைகள் முனிவர்கள்மீது விழுகின்றன அவைகள் அமுதத்தின் திவிலைகளையே முனிவர்கள்மீது வாரி வீசுவதுபோல காணப்படுகின்றன அவர் ஆத்மஞான உபதேசத்தால் மோஹமெனும் இருளை நீக்குகின்றார் அவ்வாறு காட்சிதரும் தக்ஷிணாமூர்த்தி சின்முத்திரையுடன் கூடிய தனது திருக்கரத்தால தத்வமஸி என்ற மஹாவாக்யார்த்தமான ஜீவபரஹ்மைக்ய ஞானம் ஏற்படும்படி அருள செய்யட்டும். (13)

अगौरगात्रैरललाटनेत्रैरशान्तवेषैरभुजङ्गभूषैः ।
अबोधमुद्रैरनपास्तनिद्रैरपूर्णकामैरमरैरलं नः ॥ १४ ॥

அகௌர காத்ரை ரலலாடநேத்ரை –
ரஶாந்தவேஷை ரபுஜங்க பூஷை: ।
அபோதமுத்ரை ரநபாஸ்த நித்ரை –
ரபூர்ண காமை ரமரை ரலம் ந: ॥

**अगौरगात्रैः**–வெண்மையான சரீரம் இல்லாதவர்களாயும் **अललाटनेत्रैः**–நெற்றிக்கண் அற்றவர்களாயும், **अशान्तवेषैः**–அமைதியைத்தரும் வேஷம் இல்லாதவர்களாயும் **अभुजङ्गभूषैः**–பாம்புகளை அணிகலமாகக்கொள்ளாதவர்களாயும், **अबोधमुद्रैः**–சின்முத்திரை யில்லாதவர்களாயும், **अनपास्तनिद्रैः**–மோஹம் உள்ளவர்களாயும், **अपूर्णकामैः**–நிறைவேறாத மனோரதங்களையுடையவர்களுமான, **अमरैः**–தேவர்களால **नः**–நமக்கு, **अलम्**–போதும்.

தக்ஷிணமூர்த்தி அழகிய திருமேனி படைத்தவர். அவரது உடல் களங்கமற்ற சந்திரன்போல் வெண்மையானது. அவரே பரமேச்வரன் ஆதலால அவர் நெற்றிக் கண் பெற்று விளங்குகிருர். அக் கண்ணிலிருந்து அக்னி ஜ்வாலைகள் கிளம்புவதால் அவர் பகைவர்கள் அனைவரையும் அழிக்கும் ஆற்றலுடையவர். இவ்வாறு இருப்பினும் அவர் மிகவும் சாநதஸவரூபி. ஆன்மஞானமே உருவெடுத்து விளங்குவதுபோல் காணத்தக்கவர். அவருடைய திருமேனி அரவங்களால் அழகுபடுத்தப்பட்டுள்ளது. அதனுல் அவர் பயங்கரமாயும் ரமணீயமாயும் காட்சியளிக்கின்ருர் அவரது திருக்கரத்தில ஜீவனும் பிரம்மமும் ஒன்றே என்று அறிவுறுத்தும் சின்முத்திரை காணப்படுகின்றது. அவர் என்றும் அஞ்ஞானமென்ற தூக்கத்தை விலக்கி ஆத்மபோதம் என்ற ஜாக்ரதவஸ்தையிலேயே இருக்கின்ருர் இவ்வாறு நமது அறியாமையெனும் இருளை நீக்கி நமக்கு ஆன்ம ஒளியை அளிக்கும சின்மயனை தக்ஷிணமூர்த்தியையே நாம் போறறுவோமாக இக்குணங்கள் அற்ற மற்ற தெய்வங்களைப் போற்றுவதால் யாது பயன் ? (14)

दैवतानि कति सन्ति चावनौ नैव तानि मनसो मतानि मे ।
दीक्षितं जडधियामनुग्रहे दक्षिणाभिमुखमेव दैवतम् ॥ १५ ॥

தைவதானி கதி ஸநதி சாவநௌ
நைவ தானி மநஸோ மதானி மே।
தீக்ஷிதம் ஜடதியாமநுக்ரஹே
தக்ஷிணபிமுகமேவ தைவதம் ॥

**अवनौ**-பூமியில், **कति**-எவ்வளவு, **दैवतानि**-தேவதைகள், **सन्ति**-இருக்கின்றனர் ? **तानि**-அவர்கள், **मे**-என்னுடைய, **मनसः**-மனதிறகு, **नैव मतानि**-உகந்தவாகளாக இலலவே இல்லை. **जडधियां**-அறிவற்றவாகளுக்கு, **अनुग्रहे**-அருள் புரிவதில், **दीक्षितं**-தீக்ஷைபெற்ற, **दक्षिणाभिमुखमेव**-தென் திசையை நோககியிருப்பவரே, **दैवतम्**-தேவதை.

இப்பூவுலகின்கண் எண்ணற்ற தெய்வங்கள் போற்றப் படுகின்றன ஆனல் அவர்கள் தக்ஷிணுமூர்த்தியைப்போல் ஆன்மஞானத்தையளித்து ஜீவர்களை அஞ்ஞானமெனும் ஆழ்ந்த நித்திரையிலிருந்து எழுப்பும் சக்திவாய்ந்தவர்கள் அலல ஆகையால் அவர்கள் என் மனதிற்கு உகந்தவர்கள் அலல. எனக்கு ஆத்மபோதத்தை அளிக்கவல்ல தக்ஷிணு மூர்த்தியே உகநத தைவம்.

மேற்கணடவாறு கூறியிருப்பதைக்கொண்டு பகவத் பாதர் மற்ற தெய்வங்களை இகழ்வதாக நினைக்ககூடாது. அவர் ஆறு சமயங்களையும் நிலைநாட்டிய ஆசார்ய புருஷர். தக்ஷிணுமூர்ததியைப் போலவே மறற தேவதைகளையும் கொண்டாடுகின்றவர். அவா மற்ற எலலா தேவதைகளை யும் போறறுவதற்காகப் பல துதிகளையும் இயறறியுள்ளாா. நமக்குப் பல தெய்வஙகளிடததும் பகதி இருப்பினும் நம் மனம் ஒரே ஒரு தெய்வத்தினிடத்து நிலைத்து நிறக வேணடும். இம்மாதிரி ஒரே தெய்வத்தை அனவரதமும தியானிபபதறகு "பராபகதி" என்று பெயர். இவ்வாறு சிறநத பகதியுள்ள மகாபுருஷனுக்கு ஆன்மஞானம் எளிதில கிடடும. அவனவன் ருசிப்படி இஷடதேவதையினிடம் பர பக்தி ஏற்படுவதறகாக ஒவ்வொரு ஸ்தோத்திரத்திலும் அந்த தேவதையே மிகவும் உயாநதது எனக் கூறுவார் **'नहि निन्दा निन्दितुं प्रवृत्ता अपि तु स्तुत्यं स्तोतुं'** என்ற நியாயப்படி நிந்தைபோல காணப்படும் வாக்யங்களுக்கு தக்ஷிணு மூர்ததியை ஸ்துதி செயவதிலதான் தாத்பர்யம். உண்மை யில ஒரே ப்ரஹ்மம்தான் பல உருவம் கொண்ட பல தேவதை களாகக் காணப்படுகிறது. (15)

**मुदिताय मुग्धशशिनावतंसिने भसितावलेपरमणीयमूर्तये ।**
**जगदिन्द्रजालरचनापटीयसे महसे नमोऽस्तु वटमूलवासिने ॥**

முதிதாய முக்த ஶஶிநாவதம்ஸிநே
பஸிதாவலேப ரமணீய மூர்த்தயே ।
ஜகதிந்த்ரஜால ரசநா படீயஸே
மஹஸே நமோऽஸ்து வடமூல வாஸிநே ॥

**मुदिताय**–மகிழ்ச்சி உடையவராயும், **मुग्धशशिनावतंसिने**–அழகிய சந்திரனை அணிகலமாகக்கொண்டவராயும, **भसितावलेप**–விபூதியைப் பூசிக்கொண்டிருப்பதால, **रमणीयमूर्तये**–மனதைக்கவரும் தோற்றத்தை உடையவராயும, **जगदिन्द्रजाल**–இவ்வுலகமெனும் மாயையை, **रचनापटीयसे**–உண்டு பண்ணுவதில ஸாமாததியமுடையவராயும், **वटमूलवासिने**–ஆலமரத்தடியில அமாநதிருபபவராயும, **महसे**–ஜ்யோதி ஸ்வரூபியாயும் உள்ள தக்ஷிணாமூாததிக்கு, **नम.**–வணககம, **अस्तु**–இருக்கட்டும்.

தக்ஷிணாமூர்த்தி எபபொழுதும் ஆனந்தததுடன் விளஙகுபவா. '**मुदितवदनं दक्षिणामूर्तिमीडे**' என்று மறறோ இடததில காணபபடுகிறது அவா தனது சடைமுடியில பிறைச்சநதிரனை அணிகலமாகத தரிததுககொணடுளளார். அவா தனது உடலை விபூதியினால அலஙகரிததுககொண டிருககிறா. அவா ஓா சிறநத மாயாவி. அவா தனனுடைய மாயையினால இவ்வுலகத்தைப படைததிருககிறா அவர் தேஜோமயமானவர் அவர் தன்னை அண்டும பகதாகளுககு ஆன்மஅறிவை அளிககும் பொருட்டு ஆலமரததடியில அமர்நதிருககின்றார். அவ்வாறு விளஙகும தக்ஷிணாமூாத்திக்கு வணககம செலுத்த நாம் கடமைப்பட்டுளளோம.

இங்கு இவ்வுலகு ஓா மாயாமயமான படைப்பு என்று கூறப்பட்டுளளது. இது **ब्रह्म सत्यं जगन्मिथ्या** என்ற தத்துவத்தைக் காட்டுகின்றது. பரபரம்மம ஒன்றுதான உணமை பொருள். இவ்வுலகம நம கண்முன் இருப்பதுபோல தோன்றினும் உணமையில இதறகு அஸ்திதவம என்பது கிடையாது. அதாவது இது ஓா ஜாலம–சொப்படி வித்யை சொபபடி வித்தைககாரன் தன்னுடைய சாமாத்யததால பல பொருள்களை நம கணமுன் கொண்டுவந்து காட்டுகிறான் ஆனால அவைகள் உடனேயே மறைந்துவிடுகின்றன. அவைகள் உணமைபபொருள்கள அலல அதுபோலவே தக்ஷிணாமூர்த்தியும் மிகுந்த சாமர்த்யம வாயநத ஓர் ஜாலவித்தைக்காரன் தனது மாயா சக்தியினால் இவ

வுலகத்தைப்படைத்து விடுகின்ருன். ஆனுல் இது அனைத்தும் மித்யை. நிலையற்றவை. உண்மைப்பொருள் ஒன்றுதான் அதையறிந்தாலதான் நாம் இந்த உலகப் பற்றையறுத்து மோக்ஷத்தையடையலாமென்று போதிப் பதற்காக ஆலமரத்தடியில அவா அமர்ந்திருக்கிருர். (16)

**व्यालम्बिनीभिः परितो जटाभिः कलावशेषेण कलाधरेण ।**
**पश्यल्ललाटेन मुखेन्दुना च प्रकाशसे चेतसि निर्मलानाम् ॥**

வயாலம்பிநீபி: பரிதோ ஜடாபி·
கலாவஶேஷேண கலாதரேண ।
பஶ்யல்லலாடேந முகேந்துநா ச
ப்ரகாஶஸே சேதஸி நிாமலாநாம் ॥

**परितः**–சுற்றிலுமம, **व्यालम्बिनीभिः**–தொங்குகின்ற, **जटाभिः**–சடைகளோடும, **कलावशेषेण**–ஓர் பிறையினுல மட்டும் எஞசியுளள, **कलाधरेण**–சநதிரனேடும், **पश्यल्ललाटेन**–நெற்றிக்கணணுடன்கூடிய, **मुखेन्दुना च**–சநதிரன் போன்ற முகத்துடனும, **निर्मलानां**–மாசற்றவாகளுடைய, **चेतसि**–மனதில, **प्रकाशसे**–விளஙகுகினறீா.

தக்ஷிணுமூர்த்தி தன்னை த்யானம் செய்கின்றவர் களுடைய மனதில தோற்றமளிககின்ருர். அவர்கள் தஙகளுடைய புண்யகர்மாககளால மனதிலுள்ள காமம் முதலான எலலா அழுககுகளையும் அகற்றித் தங்களுடைய மனதைப்பரிசுத்தமாக வைத்திருக்கிருாகள ஆதலால அவாகளுடைய மனது ஓர் மாசற்ற கணணுடிபோல ஆகி விடுகின்றது. அப்பொழுது தக்ஷிணுமூாத்தியின் ஸ்வரூபம் அவர்களது மனதில பிரதிபலிக்கின்றது. அதுசமயம் அவர் சடைமுடி தரித்தவராயும, பிறைசசநதிரனைத தனது தலை யில் தாங்கியவராயும் நெற்றிககண்ணைக் கொண்டவராயும், மதிவதனமுடையவராயும் காட்சியளிககிருர். (17)

**उपासकानां त्वमुमासहायः पूर्णेन्दुभावं प्रकटीकरोषि ।**
**यदद्य ते दर्शनमात्रतो मे द्रवत्यहो मानसचन्द्रकान्तः ॥ १८ ॥**

உபாஸகாநாம் த்வமுமாஸஹாய:
பூர்ணேந்துபாவம் ப்ரகடீகரோஷி ।
யதத்ய தே தர்ஶந மாத்ரதோ மே
த்ரவத்யஹோ மாநஸ சந்த்ரகாந்த: ॥

**त्वं**-நீர், **उपासकानां**-தன்னை உபாஸிக்கின்றவர்களுக்கு, **उमासहायः**-பரமேசவரியுடன்கூடியவராய, **पूर्णेन्दुभावं**-பூரண மான சந்திரனுடைய தன்மையை, **प्रकटीकरोषि**-வெளிப் படுத்துகின்றீர். **यद्**-எதனால, **अद्य**-இன்று, **ते दर्शनमात्रतः**-உம்மைக்கண்ட மாத்திரத்திலேயே, **मे**-என்னுடைய, **मानसचन्द्रकान्तः**-மனமாகிய சந்திரகாந்தக்கல, **द्रवति**-உருகுகிறது. **अहो**-ஆச்சர்யம்!

இந்த சுலோகத்தில பகவத்பாதா ஸ்வானுபவத்தை வர்ணிக்கின்றூர தன்னை உபாஸிக்கின்றவர்களுடைய அகக்கண்முன் பரமேசவரன் அம்பிகையுடன் கூடியவராய்க் காட்சியளிக்கின்றூர அவர் பூர்ணசந்திரனைப்போன்றவர். பார்ப்பவர்களின் மனதைக் கொள்ளை கொள்ளும் தன்மை வாய்ந்தவர். அவரைக் கண்ட மாத்திரத்தில பகவத்பாதர் மட்டற்ற மகிழ்ச்சியடைகிறூர் அதை அவர் ஓர உருவகத் தின மூலமாக எடுத்துக்காட்டுகின்றூர். அவருடைய மனது தான் சந்திரகாந்தக்கல. பரமேசவரனுடைய தோற்றமே சந்திரபிம்பம். ஆதலால சந்திரபிம்பத்தைக்கண்டு சந்திர காந்தக்கல உருகுவதுபோல பரமேசவரனுடைய ஸ்வரூபத்தைக்கண்டு ஆசார்யபாதரின் உள்ளமும் உருகி விடுகிறது. (18)

यस्ते प्रसन्नामनुसंदधानो मूर्तिं मुदा मुग्धशशाङ्कमौलेः ।
ऐश्वर्यमायुर्लभते च विद्यामन्ते च वेदान्तमहारहस्यम् ॥१९॥

யஸ்தே ப்ரஸந்நாமநுஸந்ததாநோ
மூர்த்திம் முதா முக்த ஶஶாங்க மௌளே: ।
ஐஶ்வர்யமாயுர் லபதே ச வித்யாம
அந்தே ச வேதாந்த மஹாரஹஸ்யம் ॥

## इति श्रीदक्षिणामूर्तिस्तोत्रं संपूर्णम् ॥

यः-எவன் ஒருவன், मुग्धशशाङ्कमौलेः-அழகிய மதியை முடியில தரிததிருககும், ते-உம்முடைய, प्रसन्नां-மகிழசசியுடைய, मूर्ति-உருவத்தை, मुदा-சநதோஷததுடன்கூட, अनुसंदधान-தயானம் செயதுகொணடிருககிருனே, सः-அவன், ऐश्वर्यं-செலவததையும, आयुः-நீணட ஆயுளேயும், विद्यां-கலவியையும, अन्ते-கடைசியில, वेदान्तमहारहस्यं च-வேதாந்தத்தின் சிறந்த ரஹஸ்யததையும், लभते-பெறுகிருன்

பரமேச்வரன் தன ஜடையில அழகிய சந்திரகலேயை அணிநதுகொண்டிருககிருன் அவன ஆனந்தமயமாகக காணபபடுகின்ருன் இவ்வாறு நித்யானந்தரூபியாகத் தோன்றும் பரமேச்வரனே எவன் ஒருவன் அனவரதமும் அனுஸநதானம செயகின்ருனே, அவன் சகலவிதமான நன்மைகளேயும் அடைகிருன். அவன் அளவற்ற செலவத்தையும, நீண்ட ஆயுளேயும், சிறந்த அறிவையும பெறுகின்ருன. கடைசியாக மோக்ஷசாம்ராஜ்யத்தை அளிக்கவலல வேதாந்த ரஹஸயஙகளேயும அறிநதுகொள்கிருன். ஆனநதமயமான ஸவரூபத்தை தியானம் செய்தலால் இவனும ஆனந்தரூபியாகவே ஆகிவிடுகின்ருன்.

### ஸ்ரீ தக்ஷிணுமூர்த்தி ஸ்தோத்திரம் முற்றிற்று.



॥ श्रीः ॥

# ॥ शिवकेशादिपादान्तवर्णनस्तोत्रम् ॥

# ஸ்ரீ சிவகேசாதி பாதாந்தவர்ணன ஸ்தோத்ரம்.

*[நிர்குண ப்ரஹ்மத்தை அறிய முடியாதவர்கள் தியானம் செய்வதற்காக உபநிஷத்தில் பலவிதமாக ஸகுண ப்ரஹ்மம வர்ணிக்கப்படுகிறது. இதற்கும் சக்தியில்லாதவர்களுக்காக புராணங்களில் நம்மைப் போல் கர சரணுதி அவயவங்களுடன் ஈசுவரனுடைய பல மூர்த்திகள் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. இந்த மூர்த்திகளின் திவ்ய மஹிமைகளைத் தான் எல்லா ஸ்தோத்திரங்களிலும் காணலாம் ஆனால் 33 சுலோகங்களுள்ள இந்த சிவகேசாதி பாதாந்த வர்ணன ஸ்தோத்திரத்தில் பரம சிவனுடைய கேசம் முதல் பாதம் ஈருக ஒவ்வொரு அவயவமும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது அதாவது: ஜடை, த்ரிபுண்ட்ரம், நெற்றிக் கண், புருவம், கண்கள், குண்டலம், மூக்கு, கபோலம், அதரம், தந்தபங்க்தி (பற்களின் வரிசை), நாதம், ஹாஸஹாஸம், ஐந்து முகங்கள், கழுத்து, காலகூடம், தோர மூலம், புஜங்கள், மார்பு, உதரம், ஜகநம், துடை, ஜாநு, முழங்கால், ப்ரபதம் (கால்நுனி), விரல்கள், நகம், பாதம், பாததூளி, மஹேசதத்வம, லீலை, உமை என்ற முறையில் ஒவ்வொரு அங்கத்தையும் வர்ணித்து அது எல்லோருக்கும் நன்மை தரும் என்று கூறுகிருர். இதை முழுவதும் படித்து அர்த்தத்தைத் தெரிந்துகொள்வதால் ஈசுவரனுடைய அவயவங்களைத் தனித்தனியாகவும் எல்லாம் சேர்ந்து முழு ஸ்வரூபத்தையும் மனதில் தாரணம் செய்ய அநுகூலமாக இருக்கும். இதேபோன்று பரமசிவனுடைய பாதத்திலிருந்து ஆரம்பித்து ஒவ்வொரு அவயவத்தையும் வர்ணிக்கும் சிவ பாதாதி கேசாந்த வர்ணன ஸ்தோத்திரமும், அப்படியே விஷ்ணு பாதாதி கேசாந்த ஸ்தோத்திரமும் ஆசார்யாளால் இயற்றப்பட்டுள்ளன. இவை பின்னுல் வெளியாகும். ஸௌந்தர்யலஹரியிலும் 42வது சுலோகத்திலிருந்து இதே மாதிரி தேவியின அங்க வர்ணனையைக் காணலாம்.]*

(அ) முதல் சுலோகத்தில பரமேசனுடைய ‘கபர்தம்’ என்று தனிப்பெயர்பெற்ற ஜடாபாரம் வர்ணிக்கப்படுகிறது:

देयासुर्मूर्ध्नि राजत्सरससुरसरित्पारपर्यन्तनिर्य-
त्प्रांशुस्तम्बाः पिशङ्गास्तुलितपरिणतारक्तशालीलता वः ।
दुर्वारापत्तिगर्तश्रितनिखिलजनोद्धारणे रज्जुभूता
घोराघोर्वीरुहालीदहनशिखिशिखाः शर्म शार्वाः कपर्दाः ॥

தேயாஸுர் மூர்த்நி ராஜத் ஸரஸ ஸுரஸரித் பார பர்யந்த நிர்யத்
ப்ராம்ஶு ஸ்தம்பா: பிஶங்காஸ் துலித பரிணதாரக்த ஶாலீலதா வ: ।
துர்வாராபத்தி கர்த்த ஶ்ரித நிகில ஜநோத்தாரணே ரஜ்ஜு பூதா
கோராகோர்வீ ருஹாலீ தஹந ஶிகி ஶிகா ஶர்ம ஶார்வா: கபர்தா: ॥

मूर्ध्नि-சிரஸில, राजत्-விளங்குகின்ற, सरस-நீர் நிரம்பிய सुरसरित्-கங்கா நதியின், पार-கரையின, पर्यन्त-சமீபத்திலுள்ள இடங்களில, निर्यत्-வளாகின்ற, प्रांशु-உயரமான, स्तम्बाः-புல் பூண்டுகளாக விளங்குகின்றவைகளும், पिशङ्गाः-மங்கிய செந்நிறமுடையவைகளாயும், तुलित-நிகராகச் செய்யப்பட்ட, परिणत-பழுத்து, आरक्त-சிறிது சிவந்திருக்கின்ற, शालीलताः-நெற்கதிர்களை உடையதும், दुर्वार-தவிர்க்க முடியாத, आपत्ति-ஆபத்தாகிய, गर्त-படுகுழியை, श्रित-அடைந்த, निखिल-எல்லா, जन-மக்களையும், उद्धारणे-கை தூக்கிவிடுவதில, रज्जुभूताः-கயறுகளாக ஆனவைகளாயும், घोर-பயங்கரமான, अघ-பாபமாகிய, उर्वीरुह-மரங்களுடைய, आली-வரிசைகளை, दहन-எரிப்பதில், शिखि-நெருப்பின், शिखाः-ஜ்வாலைகளாக விளங்குகின்றதும், शार्वाः-சிவபெருமானுடையதுமான, कपर्दाः-சடைமயிர்கள், वः-உங்களுக்கு, शर्म-சுகத்தை, देयासुः-கொடுக்கட்டும்.

முதலில் பரமாத்மாவாகிய சிவபெருமானின் சடைகள் வாணிக்கப்படுகின்றன. இவைகள பாபங்களைப் போக்கும் வன்மை வாய்ந்தவைகள். நம அனைவருக்கும் நன்மை

பயக்கும் தன்மை கொண்டவைகள். ஸம்ஸாரமெனும் பாழும் கிணற்றில் தத்தளிக்கும் மானிட வர்க்கத்தைக் கை தூக்கி விடுவதற்குக் கயறுகள் போன்றவைகள். இச்சடை கள நதிக் கரையின் அருகாமையில் உள்ள இடங்களில் வளரும் புல பூண்டுகள என்று உருவகப்படுத்திக் கூறப் பட்டுள்ளன சிவபெருமான் தன்னுடைய தலையின் மீது நீா நிரமபிய கஙகா நதியைத் தாங்கி நிறகின்றுர். அக் கங்கா தேவியே இங்கு சிறந்த ஆருக விளங்குகின்றது இவ்வாற்றின் அருகாமையிலுள்ள தலை தான் இங்கு செழிப்பு மிகும வளம் வாயநத நிலம் இதன்மீது வளரும் மங்கிய செநநிறம் கொண்ட மயிாகளே புல பூண்டுகள் இவைகள் மிகவும் உயரமாக வளாநதுள்ளன. நோயவாய்ப் பட்டு ஆருத் துயா பெறும் மககளுக்குப் புல பூண்டுகள் உற்ற மருந்துகளாக ஆகி அவாகளுடைய துன்பத்தை நீக்குகின்றன அது போலவே இச சடைகளும மககளின் மனத துயரைப் போககும் சகதியுளளவை என்பது இதனுல் நன்கு விளக்கப்பட்டுளளது. இசசடைகள் நன்ருக வளாநது பழுப்பு நிறமுளளவைகளாகக காணப்படுவதால இவைகள் நன்ருக முற்றிய நெற்கதிர்களுககு ஒப்பாகக் காணப்படு கின்றன. நெற கதிாகள நமககு உணவளித்து நம்மை எவ்வாறு காககின்றனவோ அது போலவே இச சடைகள் நம்மைக காததருளும் என்பது இங்கு புலனுகின்றது. மேலும நமககு எவவளவோ இன்னலகள ஏறபடுகின்றன. அவைகள் நம்மால தவிாகக முடியாதவைகள இவைகளே படுகுழிகள். இவைகளில வீழ்நதவாகளேக கரையேற்ற ஓர் பெரும் கயிறு அவசியமாக இருக்கின்றது. சிவபெரு மானின் சடைகளே நம்மைக கரையேறறும் கயிறுகளாக இருநது நம்மை ஆபததிலிருந்து காப்பாற்றுகின்றன. மேலும் பயஙகரமான பாபங்கள தான் கொடிய மரங்கள். சிவபெருமானின் செஞ்சடைகள் தான் தீக்கனலகள. தீப் பொறிகள் செந்நிறமுளளவை யாதலால் சிவபெருமானின் செஞ்சடைகளைத் தீககனலகளாக உருவகப்படுததிக் கூறப் பட்டுள்ளது. அக்னி ஜ்வாலைகள காடுகளை எரித்துச சாம்பலாககச் செய்கின்றன. அது போலவே இச சடைகள்

கொடிய பாபங்களாகிய மரங்களை எரித்துச் சாம்பலாகச் செய்து விடுகின்றன. இவ்வாறு விளங்கும் பரமேச்வர னுடைய சடைகள் நமக்கு மங்களங்களை வழங்க வேண்டு மென்று ஆசார்யபாதர் இங்கு வேண்டுகின்றார்.

இச் சுலோகம் ஸ்ரக்தரா என்ற விருத்தத்தில் அமைந் துள்ளது. இதில பல அணிகளும் த்வனிப் பொருள்களும் நிறைநதுள்ளன. கங்கா நதி மிகுந்த விஸ்தாரமுள்ளது. அது சிவபெருமானின் தலையில ஒா பாகத்தில இருப்பதாக வர்ணிக்கப்பட்டுள்ளது. ஆனால சடைகளோ எனில நதி யின ஓரத்திலுள்ள இடங்களில விஸ்தாரமாக வளர்ந்துள் ளன. இவ்வளவுக்கும இடமாகத் தோன்றும் தலை கங்கை யைக் காட்டிலும் பெரியதாகத் தோன்றுகின்றது ஆதலால் இங்கு அதிகம என்ற அணி வயங்கியமாகத் தோன்றுகின் றது. இது உருவகததை ஆதாரமாகக் கொண்டுள்ளது. மேலும் சிவபெருமானுடைய சடைகள் ஆபத்தெனும் குழியில விழுந்தவர்களை வெளியே எடுககும் கயிறுகள் என்று உருவகப் படுத்திக் கூறப்பட்டுள்ளது இதனால அச் சடைகளைத் தாங்கி நிறகும் சிவபெருமான் நம் அனைவ ரையும் ஆபத்திலிருந்து காக்க வல்லவா என்ற வ்யங்க் யாரத்தம் வெளிப்படுகின்றது.

இதனால ஸம்ஸார மெனும் துன்பக் கடலில ஆழ்ந்த வர்கள் அதிலிருந்து கரையேறுவதற்காகச் சிவபெருமா னின் சடைகளைத் துதித்தல வேண்டும். அதனால் மகிழ் வுற்ற பரமேசவரன் அவர்களிடம பரிவு காட்டி அவர்களை அக கடலில் ஆழந்து அமிழாவண்ணம் காத்தருள் புரிகிறார் என்று விளங்குகிறது.

இநத சுலோகத்தில **सरससुरस** என்பதிலும் **शिखिशिखा** என்பதிலும் அனுப்ராஸம் என்ற ஒலி அணியும் மறறவை களில உவமை, உருவகம், அதிகம் முதலிய பல அணிகளும் அமைநதுளளன. இதில் முகயமாக ஆசீ என்ற அணி உளளது என்று ப்ராசீந ஆசார்யாகளின் கருத்து. இது உருவகத்துடன் கலந்திருப்பதால் கலப்பணியாகிறது.

மேலும் எது இன்பத்தை அளிக்கின்றதோ அதுவே தனக்கோ அல்லது மற்றவர்களுக்கோ சுகத்தை அளிப்ப தற்காகத் துதிக்கப்படுகின்றது இங்கு சடைகள் சுகத்தை அளிப்பதற்காகத் தோத்திரிக்கப்படுகின்றன அதனால கபாத சப்தம் யோகரூடமானது. கேவலரூடமல்ல என்ற வ்யங்க்யத்தால அலங்காரத்தின மூலம பொருள வயங்க் யத்தை அடைகின்றது. (1)

(அ) நெற்றியில காணும் த்ரிபுண்டரம, அதாவது விபூதியாலான மூன்று பட்டைகளை வாணிக்கிறார் :—

**कुर्वन्निर्वाणमार्गप्रगमपरिलसद्रूप्यसोपानशङ्कां**
**शक्रारीणां पुराणां त्रयविजयकृतस्पष्टरेखायमाणम् ।**
**अव्यादव्याजमुच्चैरलिकहिमधराधित्यकान्तस्त्रिधोद्य-**
**ज्जाह्नव्याभं मृडानीकमितुरुडुपरुक्पाण्डरं वस्त्रिपुण्ड्रम् ॥**

குர்வந் நிர்வாண மார்க பரகம பரிலஸத ரூபய
ஸோபாந ஶங்காம்
ஶக்ராரீணாம் புராணாம் த்ரயவிஜய க்ருத
ஸபஷ்ட ரேகாயமாணம் ।
அவ்யா தவ்யாஜமுசசை ரலிக ஹிமதராதித்ய காநத
ஸதரிதோத்ய-
ஜ்ஜாந்ஹவ்யாபம் ம்ருடாநீகமிதுருடுபருக
பாண்டரம வஸ்த்ரிபுண்ட்ரம் ॥

**निर्वाणमार्ग**-மோக்ஷ மார்க்கத்திற்கு, **प्रगम** -சுலபமாகச் செல்லும், **परिलसत्** -விளங்குகின்ற, **रूप्यसोपान**-வெள்ளிப் படிக்கட்டுகளின, **शङ्कां**-ஸந்தேகத்தை, **कुर्वन्** - செய்து கொண்டும், **शक्रारीणां**-இந்திரனின் பகைவர்களான அரக்கர் களுடைய, **पुराणां**-பட்டினங்களின், **त्रय**-மூன்றையும, **विजय**-ஜயித்ததால், **कृत**-செய்யப்பட்ட, **स्पष्ट**-வெளிப்படையான, **रेखायमाणम्** -அடையாளக் கோடுகளாய்க் காட்சியளிக்கின் றவைகளாயும், **उच्चैः** -உயரமான, **अलिक**-நெற்றியாகிய,

**हिमधरांधित्यक**-இமயமலையின் சாரலின், **अन्तः**-ந டு வி ல, **त्रिधोद्यत्**-மூன்ருகக கிளமபுகின்ற, **जाह्नव्याभं**-கஙகையைப் போன்றதும், **उडुपरुक्पाण्डरं**-சநதிரனுடைய ஒளியைபபோல் வெண்மையானதுமான, **मृडानीकमितुः**-பா ர் வ தி யி ன் பதியான பரமேசவரனுடைய, **त्रिपुण्ड्रम्**-விபூதிபபடடையின் முககோடுகள, **वः**-உஙகளே, **अव्याजं**-உண்மையாக, **अव्यात्**-காபபாற்றடடும.

சிவபெருமானுடைய பரநத நெறறியின் கண் மூன்று விபூதிப்படடைகள மின்னிககொணடிருககின்றன. அவைகளை நனகு த்யானம் செயயும் பக்தாகள இம் மண்ணுலகை விடடுச செலலுமபோது மோக்ஷத்தை அடைகினறனா. ஆகையால இநத விபூதிபபடடை களே இஙகு மோக்ஷ மாாககத்தின் படிககட்டுகளாக வாணிககபபட்டுள்ளன. இவவுலகில உயாநத இடஙகளேச சுலபமாக அடையும் பொருட்டுக கறகளாலும மற்றும மரம முதலிய ஸாதனங் களாலும நலல படிககட்டுகள அமைககப்படுகினறன. அதுபோலவே மோக்ஷம என்பது ஓா உயாநதநிலே. அதை அடைந்தவன் மறுபடியும் இம்மண ணுலகை அடைவதிலலே. அவ்வாருன ஓா உயாநத நிலேயை அடையப பரமேசவர னுடைய நெறறியில அழகான மூன்று படிகள் கடடபபடடு உளளன. அவைகள் வெண்மையான விபூதியால செய்யப் பட்டுளளதால வெள்ளியால கட்டப்படடவைகள போல காடசியளிககின்றன. மேலும் பரமேசவரனுடைய திருமேனி இமய பர்வதமபோல உன்னதமானது. அவரது நெற்றியோ அபபாவதத்தின் ஓர் பெரிய சாரல போல தோற்றமளிக் கின்றது. இமயமலேயில கஙகைபெருகி மூன்ருகப் பிரிவது போல இவரது நெறறியில திகழும் மூன்று பட்டைகளும் விளங்குகின்றன.

பரமேச்வரன் ஒரு தடவை தேவர்களுக்குப்பகைவர் களான அஸுராகளின முப்புரஙகளேயும் எரித்துச் சாமப லாக்கினுர். மூன்று பட்டிணஙகளேயும அழித்து அஸுரர் களே ஜயிததததறகு அடையாளமாக அவா மூன்று கோடு களேத் தனது நெற்றியில் வரைந்துகொண்டிருக்கின்ருர்

போலும் இம்முப்பட்டை சந்திரனுடைய காநதியைப்போல் பிரகாசிததுககொண்டு பார்பபவாகளின் உளளதெழும் மூன்று தாபங்களையும நீககவலலதாய்த் தோறறுகினறது. இவ்வாருகத் திகழும உமாகாநதனின் விபூதிபபடடை பகதாகள் அனைவரையும காத்தருளவேணடும். (2)

(அ) காமாந்தகனின் நெற்றிக்கண் வாணிககப்படுகிறது —

क्रुध्यद्गौरीप्रसादानतिसमयपदांगुष्ठसंक्रान्तलाक्षा-
बिन्दुस्पर्धि स्मरारेः स्फटिकमणिदृषन्मग्नमाणिक्यशोभम्।
मूर्ध्न्युद्यद्दिव्यसिन्धोः पतितशफरिकाकारि वो मास्तकं स्ता-
दस्तोकापत्तिकृत्यै हुतवहकणिकामोक्षरूपं सदाऽक्षि ॥

கருத்யத் கெளரீ ப்ரஸாதாநதிஸமய பதாங்குஷ்ட ஸங்க்ராநத லாக்ஷா
பிநது ஸ்பாதி ஸ்மராரே: ஸ்படிக மணிதருஷந மக்ந மாணிகய ஶோபம் ।
மூர்தன்யுத்யத் திவ்யஸிநதோ பதித ஶபரிகாகர்ரி வோ மாஸதகம் ஸ்தாத்
அஸதோகாபத்தி கருத்த்யை ஹுதவஹ கணிகா மோக்ஷரூக்ஷம ஸதாऽக்ஷி ॥

क्रुध्यत्-கோபமடைகினற, गौरीप्रसाद्-பார்வதியை மகிழ விககும பொருட்டு, आनतिसमय-வணஙகும காலததில, पदाङ्गुष्ठ-காலகட்டை விரலினின்றும, संक्रान्त- படிநத, लाक्षा-செமபஞசுககுழமபின, बिन्दुस्पर्धि - திவிலையைபபோன்று விளஙகுகின்றதாயும், स्फटिकमणिदृषत् - ஸபடிகமெனனும் இரத்தினககலலில, मग्न - பதிநதிருககும், माणिक्यशोभम्- மாணிககத்தின அழகு வாய்ந்ததும், मूर्ध्नि-தலையில, उद्यत्- பெருகுகின்ற, दिव्यसिन्धोः - கஙகா நதியிலிருந்து, पतित- விழுநத, शफरिकाकारि-மீனின் தோறறததை உடையதாயும் हुतवह-நெருப்பின், कणिका-துணுக்குகளை, मोक्ष-விடுவதால்

**रूक्षं**–கடுமையானதாயும, **मास्तकं**–நெறறியில உளளதுமான, **स्मरारेः**–பரமசிவனுடைய, **अक्षि**–கண், **सदा**–எப்பொழுதும் **वः**–உஙகளுககு, **अस्तोकापत्ति**–பெரும் ஆபத்துக்களை, **कृत्यै**–நாசம செய்வதறகாக, **स्तात्**–இருக்கட்டும்.

இங்கு பரமேச்வரனுடைய நெற்றிககண் வர்ணிககப் பட்டுளளது. அது செந்நிறம் உடையதாக இருக்கிறது. அதனுல அது பாாவதியின் கால கடடைவிரலில் தீட்டப் படடிருககும் செமபஞசுககுழம்பின் திவிலேபோல காணப்படு கிறது. சில சமயங்களில உலகததின் தாயதந்தையர் களான பாாவதீ பரமேசவரர்களுககுள் ஊடல உண்டாகும். அப்பொழுது தேவீ பரமேசவரனிடம் கோபித்துக்கொள் வாள அவளேச் சமாதானம் செய்ய எணணி பரமேசவரன் அவளது திருவடிகளில பணிவான் அவ்வாறு அவன் பணியுமபொழுது தேவியின திருக்காலகளில தீட்டப்பட்ட செம்மஞசுக்குழமபின் திவிலேதான் நெற்றியில ஒட்டிக் கொண்டு கண் உருவத்தில காக்ஷி அளிக்கிறதோ என்கிருா.

மேலும் பரமேசவரனுடைய நெறறி ஸ்படிகம் போல் வெளுப்பானது. அதன் மத்தியில் உள்ள கண் ஸ்படிகக் கலலில பதிததிருககும் மாணிக்கத்தைப் போன்று சிகப்பு நிறத்துடன் பொலிவு பெறறு விளங்குகின்றது. சிவ பெருமான் தம் சடையில கஙகா தேவியைத் தாங்கி நிறகின்ருர். அநநதியில அநேக மீன்கள் விளையாடிக் கொண்டிருககின்றன அவைகளிலிருநது ஒா மீன் அவரது நெறறியில வீழ்ந்து கிடப்பது போல் அவரது கண் காட்சி அளிககின்றது மீன் போல அவரது க ண பக்தாகளிடம் பரிவு காட்டி அவாகள துன்பஙகளேக களைநது இன்புறச செய்கின்றது. இவ்வாறு இருப்பினும் அவரது கண்ணி லிருந்து தீபபொறிகள பறக்கின்றன. அதனுல அது பார்ப் பதறகு மிகவும பயஙகரமாகத திகழ்கின்றது. இவ்வாறு கூறுவதால சிவபெருமானது கண தீய எண்ணம் கொண் டவர்களே எரித்துச் சாம்பலாககும் வன்மை வாய்ந்த தென்பது தெளிவாகக் காணப்படுகின்றது. இ வ் வ ா று

விளங்கும் சிவபெருமானுடைய கண் நமக்கு உண்டாகும் இன்னலகள் அனைத்தையும் களைந்து மகிழ்ச்சியைத் தர வேண்டும். (3)

(அ) பரமேசரின் இருபுருவங்களை வர்ணிக்கிறார்:—

भूत्यै दृग्भूतयोः स्याद्यदहिमहिमरुग्बिम्बयोः स्निग्धवर्णो
दैत्यौघध्वंसशंसी स्फुटमिव परिवेषावशेषो विभाति ।
सर्गस्थित्यन्तवृत्तिर्मयि समुपगतेतीव निर्वृत्तगर्वं
शर्वाणीभर्तुरुच्चैर्युगलमभिदधद्विभ्रमं तद्भ्रुवोर्वः ॥ ४ ॥

பூத்யை த்ருக்பூதயோ. ஸயாத யதஹிம ஹிமருக பிம்பயோ: ஸ்நிக்த வர்ணோ
தைத்யௌக த்வம்ஸ ஶம்ஸீ ஸ்புடமிவ பரிவேஷாவஶேஷோ விபாதி ।
ஸர்க ஸ்தித்யந்த வ்ருத்திர் மயி ஸமுபகதேதீவ நிர்வருத்த கர்வம்
ஶர்வாணீ பர்த்துருச்சைர் யுகலமபிததத விப்ரமம் தத் ப்ருவோர் வ: ||

**सर्गस्थित्यन्तवृत्तिः**-படைத்தல், காத்தல, அழித்தல என்ற முத்தொழிலும், **मयि**-என்னிடத்தில, **समुपगता**-நன்கு வநதுள்ளது, **इति**-என்று, **निर्वृत्तगर्वमिव**-கர்வமடைந்தது போல, **उच्चैः**-உயர்ந்த, **विभ्रमं**-விலாஸத்தை, **अभिदधत्**-பெற்று விளங்கும், **शर्वाणीभर्तुः**-பார்வதியின் பதியான பரமேசவரனுடைய, **यत्**-எந்த புருவங்களின் ஜோடி, **दृग्भूतयोः**-(சிவனுககு) கண்களாக அமைந்துள்ள, **अहिमहिमरुग्बिम्बयोः**-சூர்யன் சந்திரன் இவர்களுடைய மண்டலங் களின், **स्निग्धवर्णः**-மிகுந்த ஒளியுடையதாய், **दैत्यौघध्वंसशंसी**-அரக்கர்கள குழாத்தின் அழிவைக்காட்டும், **परिवेषावशेषः इव**-பாதிவட்டம் போல, **स्फुटं**-தெளிவாக, **विभाति**-விளங்குகின்றதோ **तत्**-அந்த, **भ्रुवोः युगलं**-இரு புருவங்கள் **वः**-உங்களுடைய, **भूत्यै**-செலவத்திற்காக, **स्यात्**-இருக்கட்டும்.

உலகிற்கு ஒளியைத் தந்து இருளை நீக்கும் சூரியனும் சந்திரனும் பரமேச்வரனுக்கு இரண்டு கண்களாக அமைந் துள்ளனர் அவைகளின் மேல விளங்கும் இரு புருவங் களும் ஸூரிய மண்டலத்தையும் சந்திர மண்டலத்தையும் சுற்றிலும் காணப்படும் வட்டத்தின் பாதி (பாதி வட்டம்) போல ஒளியுடன் விளங்குகின்றன. இது அரககர் கூடடத்தின் அழிவுககு அறிகுறியாக இருககிறது

இப் புருவங்களே ஆககல, காத்தல், அழித்தல என்ற முத்தொழில்களையும் செய்கின்றன. அதாவது சிவபெருமான் தம் புருவங்களை அசைத்தமாததிரத்திலேயே உலகனைத்தும் உணடாகிறது. இருக்கிறது முடிவடைகிறது புருவஙகளை அசைப்பதைத தவிர இதறகாக ஈசுவரன் வேறு ஒரு காரி யமும செய்வதிலலை. இதே அபிப்ராயத்தை ஸௌநதர்ய லஹரியிலும் '**तवाज्ञामालम्ब्य क्षणचलितयोर्भ्रूलतिकयोः**' (சு. 24) என்று கூறியுள்ளார் இவ்வாறு இம்முத்தொழில்களையும் தாங்களே செய்து வருவதால மிகக காவம் கொணடு இரு புருவங்களும உயாநத இடததில் அமாந்திருக்கின்றன. இவ்வாறு விளங்கும சிவபெருமானுடைய இரு புருவங் களும் எலலாப பிராணிகளுக்கும் ஐசுவாயத்தைக் கொடுக கட்டும் (4)

(அ) அரககர் கூடடத்தை அழிக்கும் சஸ்திரம்போல விளங்கும் இரு கண்களை வர்ணிக்கிறா—

**युग्मे रुक्माब्जपिङ्गे ग्रह इव पिहिते द्राग्ययोः प्राग्दुहित्रा**
**शैलस्य ध्वान्तनीलाम्बररुचिरबृहत्कञ्चुकोऽभूत्प्रपञ्चः ।**
**त्र्यक्षस्यैते पवित्रे त्रिदशवरघटामित्रजैत्रोग्रशस्त्रे**
**नेत्रे नेत्रे भवेतां द्रुतमिह भवतामिन्द्रियाश्वान्नियन्तुम् ॥**

யுக்மே ருக்மாப்ஜபிங்கே ரஹ இவ பிஹிதே த்ராக்
யயோ: ப்ராக் துஹித்ரா
ஶைலஸ்ய த்வாந்த நீலாம்பர ருசிர ப்ருஹத்
கஞ்சுகோऽபூத் ப்ரபஞ்ச: ।

த்ர்யக்ஷஸ்யைதே பவித்ரே த்ரிதஶவர கடாமித்ர
ஜைத்ரோக்ர ஶஸ்த்ரே
நேத்ரே வேத்ரே பவேதாம் த்ருதமிஹ பவதா
மிந்த்ரியாஶ்வாந் நியந்தும் ||

**रुक्माब्जपिङ्गे**-பொற்றாமரைபோல் பிங்கநிறமுள்ள, **ययोः**-எந்த இரண்டு கண்களுடைய, **युग्मे**-ஜோடிகளும், **शैलस्य**-மலையின், **दुहित्रा**-மகளால் (பார்வதியால) **प्राक्**-முன்னல் **रह इव**-தனிமையில போல, **द्राक्**-விரைவில, **पिहिते सति**-மூடப்பட்டவுடன், **प्रपञ्चः**-உலகம, **ध्वान्त**-இருளாகிய, **नीलाम्बर**-நீல வர்ணமுள்ள ஆடையினலான, **रुचिर**-அழகிய, **बृहत्**-பெரிய, **कञ्चुकः**-சட்டையையுடையதாக, **अभूत्**-ஆயிற்றே. **पवित्रे**-புனிதமாயும், **त्रिदशवरघटा**-சிறந்த தேவர்களின் கூட்டத்திறகு, **अमित्र**-பகைவர்களான ராக்ஷஸர்களை **जैत्र**-ஜயிக்கின்ற, **उग्र**-பயஙகரமான, **शस्त्रे**-ஆயுதங்களாகத் திகழும், **त्र्यक्षस्य**-முக்கண்ணனுடைய, **एते नेत्रे**-இவ்விரு கண்களும், **इह**-இங்கு **भवतां**-உங்களுக்கு, **द्रुतं**-விரைவில், **इन्द्रियाश्वान्**-புலன்களாகிய குதிரைகளை, **नियन्तुं**-அடக்குவதற்கு, **वेत्रे**-சாட்டைகளாக, **भवेताम्**-ஆகட்டும்.

ஓர் சமயம் பார்வதீ தேவி பரமேச்வரனுடைய இரு கண்களையும் தன் கைகளால பொத்தினள உலகனைத்திற கும் ஒளி தந்து இருளைநீககவலல அவ்விருகண்களும மூடப் பட்டவுடன் எஙகும இருள் சூழ்நதது. ஏனெனில சூர்ய சந்திரர்கள்தான் பரமேசவரனுடைய இரு கண்கள. இவை கள் பொன்களபோல பொலிவுடன் விளஙகுகின்றவை. இவைகள் மறைக்கப்பட்டவுடன் உலகம் ஒளியிழந்தது. எங்கும் இருள சூழ்ந்து கிடந்தது இதைக்காணும்பொழுது நீலநிறமுள்ள ஓர் பெரிய ஆடையை இவவுலகம போர்த்திக் கொணடிருக்கிறதோ என்ற ஐயம் எழுகின்றது. இவ்விரு கண்களும் தேவர்களின் பகைவர்களாகிய அரக்கர்களை அழிக்கும் ஆயுதங்களாக விளங்குகின்றன. சிவபெருமான் கோபத்துடன் அரக்கர்களைப் பாரக்கும்பொழுது அவரது

இது முகமாகிய சந்திரன் என்ற உருவகத்துடன் கலந்திருக கின்றது மேலும் இநதிராதி தேவர்கள அபபாதகமலங் களைத் தஙகள் மனமாகிய பொய்கையில வைத்துக கொண்டிருக்கிறாகள தாமரைகள் பொயகையில மலா கின்றன அதுபோல தேவாகளின் மனதில இப்பாதஙகள விளஙகுகின்றன அதாவது தேவாகள் தங்களுடைய மனதில பரமேசவரனுடைய பாதகமலஙகளை த்யானம் செய்கிறார்கள். அதனல அவர்கள தஙகள் தங்களுடைய ஐசவாயத்தை அடைகிறார்கள். வணடுகளின் இனஙகள மிக்க ஆவலுடன் தாமரையை அடைகின்றன அது போலவே அறிவாளிகளின் கூட்டம் பரமேசவரனுடைய பாதகமலங்களைப் போறறுகின்றது. இவ்வாறு விளங்கும பாதகமலங்கள உங்களுககுச சகல ஐசவாயங்களையும் அள்ளி அளிக்கட்டும் (27)

(அ) ராகம் முதலிய தோஷங்களைபபோக்கி பிறவிக கடலைத் தாண்டசசெய்யும் பாததூளியை வாணிககிறார்:—

येषां रागादिदोषक्षतमतियतयो यान्ति नित्यं प्रसादा-
द्देवान्नम्रात्ममूर्तिद्युसदृषिपरिषन्मूर्ध्नि भूषायमाणाः ।
श्रीकण्ठस्यारुणोद्यच्चरणसरसिजप्रोत्थितास्ते भवाख्या-
त्पारावाराच्चिरं वो दुरिततहतिकृतस्तारयेयुः परागाः ॥ २८ ॥

யேஷாம் ராகாதி தோஷ க்ஷதமதி யதயோ யாநதி நித்யம் ப்ரஸாதாத்
தேவாந் நம்ராத்ம மூாத்தி த்யுஸத்ருஷி பரிஷன்மூாத்நி பூஷாயமாணு: ।
ஸ்ரீகண்டஸ்யாருணேத்யசசரண ஸரஸிஜ ப்ரோததிதாஸதே பவாக்யாத்
பாராவாராச்சிரம் வோ துரித ஹதி கருதஸ்தாரயேயு: பராகா: ॥

रागादि- விஷயஙகளில பறறு முதலிய दोष – தோஷங் களால் क्षत – புண்பட்ட मति – புத்தியுள்ளவர்களாயிருந்

தாலும் यतयः – பஜிப்பவர்கள் येषां – எவைகளுடைய प्रसादात् அருளால் नित्यं – எப்பொழுதும் देवान् – தேவர்களை (தேவப்பிறவியை) यान्ति – அடைகிறார்களோ नम्र – வணங்கிய आत्ममूर्ति – தங்கள் தேகங்களையுடைய द्युसद् – தேவர்களுடையவும் ऋषि – முனிவர்களுடையவும் परिषत् – ஸபையின் मूर्ध्नि – தலையில் भूषायमाणाः அணிகளாக விளங்குகின்றவைகளாயும் चिरं – எப்பொழுதும் दुरित – பாவங்களுடைய हृति – நாசத்தை कृतः – செய்கின்றவைகளாயுமுள்ள श्रीकण्ठस्य – சிவபெருமானுடைய अरुणोद्यत् – சிகப்பாகக் காண்கின்ற चरणसरसिज – பாதங்களாகிய தாமரைகளிலிருந்து प्रोत्थिताः கிளம்பிய ते परागाः – அந்தத் தூளிகள் (மகரந்தப் பொடிகள்) भवाख्यात् – ஸம்ஸாரம் என்று பெயர் கொண்ட पारावारात् – ஸமுத்திரத்திலிருந்து वः – உங்களை तारयेयुः – கரையேற்றட்டும்

சிவபெருமானுடைய திருவடிகள் செந்தாமரைகள் போல விளங்குகின்றன. அவைகளிலிருந்து கிளம்பும் தூளிகள் மகரந்தப் பொடிகள்போல காணப்படுகின்றன. இவைகளைப் பஜிப்பவர்களின் உள்ளத்தில் உறைந்துள்ள காமம் முதலிய மாசுகள் அனைத்தும் அகற்றப்படுகின்றன. ஆதலால் மாசுபடிந்த மனமுடையவர்கள் கூட இவைகளுடைய அருளால் கலங்கமற்ற மனத்தினராய் தேவலோகத்தையடைந்து ஆங்கு அவர்களுடன் இன்பமாக வாழ்கின்றனர். மேலும் இந்திராதி தேவர்களும் மாமுனிவர்களும் சிவபெருமானுடைய பாத கமலங்களைப் பணிந்து வழிபடுகின்றனர். அப்பொழுது அவருடைய பாத பத்மங்களிலிருந்து கிளம்பும் செந்நிறமுடைய மகரந்தப்பொடிகள் அவர்களுடய தலையில் படிகின்றன. இவ்வாறு படிவதால் அவைகள் அவர்களுடைய தலைக்கு ஆபரணமாக அமைகின்றன. சிவபெருமானுடைய பாத கமலங்களிலிருந்து கிளம்பும் இப்பராகங்கள் உங்கள் எல்லோரையும் ஸம்ஸாரமென்னும் கடலிலிருந்து கரையேற்றட்டும்.

இங்கு சிவபெருமானுடைய பாதங்களைக் கமலங்களாகவும் பாததூளிகளை மகரந்தப்பொடிகளாகவும் உருவகப்

படுத்திக் கூறப்பட்டிருக்கிறது. ஏதாவது பாத்திரத்தில் அழுக்குப்படிந்தால் அதைச சாமபல முதலியவற்றைப் போட்டுத தேய்த்துச் சுத்தப் படுத்துகிறோம. அதுபோலவே பகதாகளின் மனதில படிந்த மாசு பாத துளியால அகறறப படுவது குறிப்பிடத்தககது. (28)

(அ) உபநிஷத்தில கூறியுளளபடி ஜ்யோதி ஸவரூப மாக பரமேசவரனை வாணிக்கிறார் :—

भूम्ना यस्यास्तसीम्ना भुवनमनुसृतं यत्परं धाम धाम्नां
साम्नां साम्नायतत्वं यदपि च परमं यद्गुणातीतमाद्यम् ।
यच्चाम्होहृन्निरीहं गगनमिति मुहुः प्राहुरुच्चैर्महान्तो
माहेशं तन्महो मे महितमहरहर्मोहरोहं निहन्तु ॥ २९ ॥

பூம்நா யஸ்யாஸத ஸீம்நா புவநமநுஸருதம் யத்பரம் தாம தாம்நாம்
ஸாம்நாம் ஸாம்நாய தத்வம் யதபி ச பரமம் யத குணாதீதமாத்யம் ।
யசசாம்ஹோஹ்ருந் நிரீஹம் ககனமிதி முஹு: ப்ராஹு: ருச்சைர் மஹாந்தோ
மாஹேசம் தந் மஹோ மே மஹிதமஹரஹா மோஹ ரோஹம் நிஹந்து ॥

**अस्तसीम्ना** – எலலையற்றதான **यस्य** – எந்தப பரமேச்வரனுடைய தேஜஸின் **भूम्ना** அகணடமான ஸ்வரூபத்தினால **भुवनं** உலகம் முழுவதும் **अनुसृतं**-வியாபிக்கப்படடுளளதோ **यत्**-எந்தப் பரமேச்வரனுடைய தேஜஸ **धाम्नां**-ஸூரியன் முதலான பிரகாச வஸதுக்களுள் **परंधाम**-மிகுந்த பிரகாச முள்ளதோ **अपि च**-மேலும **यत्**-எது **साम्नां**-ஸாமோ பநிஷதஙகளின் **साम्नायतत्वं**-திருப்பித் திருப்பிக் கூறப்பட்ட ஜீவாபின்ன ஸ்வரூபமான **परमं**-பரப்ரஹமமாக விளங்கு கின்றதோ **यत्**-எது **गुणातीतं**-முக்குணஙகளுக்கும் புறமபான தாகவும, **आद्यम्** –முதற்காரணமாகவும் இருககின்றதோ, **यत्** -எது, **अंहोहृत्** -பாவத்தைப்போக்குகின்றதோ, **निरीहं**-

ஆசையற்றதோ, **महान्तः**–வேதங்களின்பொருளை நன்கு அறிந்த பெரியோர்கள், **गगनमिति**–ஆகாசமென்று, **यत्**- எந்த தேஜஸை, **मुहुः**–அடிக்கடி, **उच्चैः**–சந்தேகமில்லாமல் **प्राहुः**–கூறுகிறார்களோ, **महितं**-எ ல் லோ ரா லும் நன்கு போற்றப்பட்ட, **माहेशं**-மஹேசுவரனுடையதான, **तन्महः**- அந்த ஜோதி, **अहरहः**–தினந்தோறும், **मे**–என்னுடைய **मोहरोहं**-அ க் ஞா ன த் தி ன் முளையை, **निहन्तु**–நாசஞ் செய்யட்டும்.

பரமேச்வரனுடைய தேஜஸ் எல்லையற்றது இது அகண்டமானது காலம், தேசம், வஸ்து என்ற மூன்று எல்லைகளும் இதற்குக்கிடையாது இது எல்லாககாலங் களிலும், எல்லா இடங்களிலும, எல்லாப்பொருள்களாகவும் விளங்குகிறது. இதை உபநிஷத்துக்கள் பூமா என்று கூறு கின்றன **भूमा त्वेव विजिज्ञासितव्यः, भूमानं भगवो विजिज्ञासे यत्र नान्यत्पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति स भूमा** " என்ற சாந்தோக்ய உபநிஷத் வாகயங்கள் பூம ஸ்வரூபததை நன்கு விளக்குகின்றன. இது உலகம முழுவதும பரவியுள்ளது ஞானஒளி வடிவமானது இதைக்காட்டிலும் அதிக ஒளி வாய்ந்தது வேறு ஒன்றும் இல்லை. உலகங்களுக்கெல்லாப் பிரகாசத்தையளிக்கும் சூ ரி ய ன், சந்திரன், அக்னி முதலியவைகள் இதனிடமிருந்தே ஒளியைப்பெறுகின்றன இதன்முன் இவைகள் பிரகாசிக்கமுடியாது. இதையே "**न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः तमेव भान्तमनुभाति सर्वं तस्य भासा सर्वमिदं विभाति ॥ तच्छुभ्रं ज्योतिषां ज्योतिः ॥**" என்ற வேதவாக்யங்கள் நன்கு எடுத்துக் காட்டுகின்றன ஸாமவேத உபநிஷத்தான சாந்தோக்யத் தில் ஒன்பது தடவை உபதேசிக்கப்பட்ட ஜீவாபின்னமான ப்ரஹ்மதத்வமும் இந்தத் தேஜஸே. இது ஸத்வம் ரஜஸ் தமஸ், என்ற மூன்று குணங்களுக்கும் புறம்பானது எல்லாவற்றிற்கும் இதுவே காரணம் இதற்குக் காரணப் வேறு ஒன்றும் இல்லை. இது எல்லாப் பாவங்களையும் போக்கவல்லது. இது எங்கும் நிறைந்த பொருளாய் இருப்ப தால் ஆசையற்றது. இதையே வேதத்தின் பொருளைப்

பரிசீலிப்பதில் ஈடுபட்ட பெரியோர்கள் ஆகாசமென்று அழைக்கின்றனர் "अस्य लोकस्य का गतिरित्याकाश इति होवाच, सर्वाणि ह वा इमानि भूतान्याकाशादेव समुत्पद्यन्ते, आकाश प्रत्यस्तं यन्त्याकाशो ह्येवैभ्यो ज्यायानाकाशः परायणम्" "आकाशो वै नाम नामरूपयोर्निर्वहिता ते यदन्तरा तद्ब्रह्म तदमृतं स आत्मा" என்ற சுருதிகள இதறகுச சான்றுகளாகின்றன. இந்தப் பரமேசவரனுடைய தேஜஸ எலலோராலும் பூஜிக்கப் படுகின்றது இது ஞானஸவரூபமானது இது என்னுடைய மனதில தினமும் தோன்றும் அஞ்ஞானமெனும் இருளை நாசம் செய்யட்டும (29)

(அ) பரமசிவனின் லீலைகளை வணங்குகிறார்:—

सुहितगिरिसुताभ्यः सूदितारिव्रजाभ्यः
सकलगुणनिधिभ्यः संपदम्भोनिधिभ्यः ।
नम इहभवतीभ्यः नन्दितश्रीपतिभ्यः
शकलितदुरिताभ्यः शम्भुलीलावलीभ्यः ॥ ३० ॥

ஸுஹித கிரிஸுதாபய, ஸூதிதாரி வ்ரஜாபய:
ஸகல குணநிதிப்ய, ஸம்பதம்போநிதிப்ய ।
நம இஹபவதீபய, நநதித ஸ்ரீபதிபய:
ஶகலித துரிதாபய: ஶம்பு லீலாவலீப்ய ॥

सुहित– ஸந்தோஷமடையுமபடி செய்யப்பட்ட गिरिसुताभ्यः– மலையரசனின மகளான பரமேச்வரியை உடைய வைகளாயும் सूदित– நாசம செய்யப்பட்ட अरिव्रजाभ्यः – பகை வர்களின் கூட்டத்தை உடையவைகளாயும सकलगुण – எல்லா குணங்களுக்கும निधिभ्यः – பொக்கிஷமாக விளங்கு கின்றவைகளாயும் सम्पद्– செல்வங்களின் अम्भोनिधिभ्यः – கடல்களாக அமைநதவைகளாயும் नन्दित– மகிழ்விக்கப்பட்ட श्रीपतिभ्यः – லக்ஷ்மீ தேவியின் பதியான மஹாவிஷ்ணுவை உடையவைகளாயும் इहभवतीभ्यः - பூஜிக்கத்தக்கவைகளா யும் शकलित– பொடியாக்கப்பட்ட दुरिताभ्यः – பாவங்களை

உடையவைகளாயும் விளங்குகின்ற शंभुलीलावलीभ्यः – பரமே சுவரனுடைய திருவிளையாடல்களுக்கு नमः – வணக்கம்

பரமேச்வரனுடைய திருவிளையாடல்கள் மலையரசனின் மகளான பார்வதீ தேவிக்கு மட்டற்ற மகிழச்சியை உண்டு பண்ணுகின்றன. பகைவாகள அனைவரையும் அழித்து உலகிற்கு க்ஷேமததையளிககின்றன. அளவுகடந்த குணங் களின் பொக்கிஷமாகத் திகழ்கின்றன அவைகளே சிறந்த செல்வங்களின் கடலகள். மிகவும் போறறத்தக்கவைகள். லக்ஷிமியின் பதியான மகாவிஷ்ணுவுககும் மிகுந்த சந்தோஷத்தையளிப்பவைகள். சகலவிதமான பாவங்களை யும் தவிடுபொடியாகச் செய்கின்ற அப்பரமேசவரனுடைய திருவிளையாடல்களுக்கு வணக்கம் செலுத்துவோம் (30)

(அ) பார்வதியை துதிக்கிறார்: —

पृथुकुचभरद्वन्द्वाभुग्नावलग्नविलासिनः
शिशिरकिरणश्रीसारस्याः श्रितेषु शिवप्रदाः ।
पृथुलजघनाः प्राणास्त्राणं क्रियासुरुमाह्वया-
श्चकितहरिणीनेत्रान्ता वो हरस्य वहिश्चराः ॥ ३१ ॥

ப்ருது குச பர த்வந்த்வாபுக்நாவலக்ந விலாஸிந:
ஶிஶிர கிரண ஶ்ரீஸாரஸயா: சரிதேஷு ஶிவப்ரதா ।
ப்ருதுல ஜகநா: ப்ராணாஸ்த்ராணம் கரியாஸுருமாஹ்வயா:
சகித ஹரிணீ நேத்ராநதா வோ ஹரஸ்ய பஹிஶசரா: ॥

**पृथु**– பெரிய **कुचभर**– ஸ்தனங்களாகிய பாரங்களின் **द्वन्द्व**– ஜோடியால **आभुग्न**– சிறிது வளைந்த **अवलग्न**– இடை யினால **विलासिनः** – உல்லாஸமாக விளங்குகின்றவைகளாயும் **शिशिरकिरण**– குளிர்ந்த கதிர்களையுடைய சந்திரனுடைய **श्री** அழகின் **सारस्याः** - இனிமை வாய்ந்தவைகளாயும் **श्रितेषु**- தன்னையண்டியவர்களிடத்தில **शिवप्रदाः** – மங்களங்களைத் தருகின்றவைகளாயும் **पृथुलजघनाः** – பெரிய இடுப்பையுடை யவைகளாயும் **चकित हरिणी**– பயந்த பெண்மானின் **नेत्रान्ताः**

கடைக கண்களைப் போன்ற கடைககண்களை யுடையவை களாயும், **उमाह्वयाः** - உமையென்று பெயருடை யவைகளு மான **हरस्य** – சிவபெருமானுடைய **बहिश्चराः** – வெளியே சஞ்சரிக்கின்ற **प्राणाः**–பிராணன் **वः** – உங்களுக்கு **त्राणं**– காப்பாற்றுதலை **क्रियासुः**–செய்யட்டும்.

உமாதேவியானவள பரமேசவரனுகரு வெளியில ஸஞ்சரிககும பராணன் போன்றவள. அவளுடைய இடை ஸதனங்களின் பாரததினால சிறிது வளைந்ததாக விளஙகு கின்றது அவளுடைய திருமேனி சநதிரபிம்பம்போல பார்பபவர்களின் மனதைக குளிரசசெய்கின்றது. அவள தனனை அணடும் பகதாகளுககு ஸகல மங்களங்களையும் அளிக்கின்றுள. அவளுடைய இடுப்பு பருமனானது. அவளது மருணட பாாவைகள அசசமுறற பெணமானின பாாவை களைப்போல அழகுபெறறு மனதைக கவர்கின்றன. இவ்வாறு தோன்றும உமாதேவி எலலோரையும காததரு ளட்டும் அாத்தநாரீசுவர ஸவரூபததில பார்வதியும பரமேசுவரனுடைய அஙகததிலேயே சோந்திருப்பதால கேசாதி பாதாந்தாஙகவர்ணனையில் பாாவதியையும தனியாக இநத சுலோகததால துதிககிறுா. (31)

(அ) இந்தத் துதியின் பலனைககூறுகிறுர்:—

आरभ्य स्मरजयिनः कपर्दभारा-
दङ्गानां स्तुतिरियमा पदाब्जपांसोः ।
ये भक्त्या मुहुरनया नमन्ति देवं
देवश्च स्मरति धिया स्वयं च तेषाम् ॥ ३२ ॥

ஆரப்ய ஸமர ஜயிநः கபர்த பாரா
தஙகாநாம் ஸதுதிரியமாபதாபஜ பாம்ஸோः ।
யே பகதயா முஹுரநயா நமநதி தேவம்
தேவஸ்ச ஸமரதி தியா ஸவயம் ச தேஷாம் ॥

**इयं**- இது **स्मरजयिनः** - மன்மதனைவென்ற சிவபெரு மானுடைய **कपर्दभारात्** - ஜடாபாரத்திலிருந்து **आरभ्य**-

துடங்கி आ पदाब्जपांसोः - பாதகமலங்களிலுள்ள தூளிவரை யில் अङ्गानां- அங்கங்களுடைய स्तुतिः- துதி. अनया-இந்தத துதியால் ये- எவாகள मुहुः - அடிககடி भक्त्या- பகதியுடன देवं- பரமேச்வரனை नमन्ति- வணங்குகிறாகளோ देवश्च- பரமேசவரனும तेषां- அவர்களை स्वयं- தானுகவே धिया தன்னுடைய புததியால स्मरति- நினைககிறா

இநத ஸதோத்ரம பரமேசவரனுடைய ஜடைகளிலிருநது ஆரம்பித்து பாதகமலஙகளில படிநதிருககும் தூளி வரை யில ஒவ்வொரு அஙகததையும் வாணிக்கின்றது. இநத ஸதோததிரத்தை மிகுநத பகதியுடன் பாடிப பரமேசவர னுடைய திருவடிகளைப பன்முறை வணங்கவேணடும். இவ்வாறு வணஙகுகின்றவாகளைப் பரமேசவரன் அவசயம் தம் மனதில இருததிககொணடு அவாகளைக் காத்தருள வான். (32)

(அ) ஒவ்வொரு அஙகமும் நன்மையைத் தரவேணடு மென்று பிரார்த்திததுவிட்டு கடைசியில சம்புவின் முழு ஸவரூபத்தை வேண்டுகிறா :—

दीव्यन्मूर्धेन्दुखण्डः सितशितनखरच्छिन्नलोकेशमुण्डः
कम्राकारोरुदण्डः प्रलयहुतवहप्रस्फुरद्बाहुदण्डः ।
चण्डीष्टोद्योतशौण्डः स्वभुजनियमिताखण्डवाणीधवाण्डः
खण्डीभूतारिमण्डः कलयतु भवतां शर्म शम्भुः प्रचण्डः ॥

தீவ்யன் மூர்தேந்து கணட: ஸித ஶித நகர சசிநந
லோகேஶ முண்ட:
கம்ராகாரோரு தணட: ப்ரளய ஹுதவஹ பரஸபுரத்
பாஹு தண்ட: ।
சண்டீஷ்டோத்யோத ஶௌண்ட: ஸ்வபுஜ
நியமிதாகண்ட வாணீ தவாண்ட:
கண்டீபூதாரி மண்ட: கலயது பவதாம் ஶர்ம ஶம்பு:
ப்ரசண்ட: ॥

दीव्यन्मूर्धेन्दुखण्डः - பிரகாசிக்கின்ற பிறைச் சந்திரனைத் தலையில தாங்கியவனும் सित- வெளுப்பானவைகளாயும்

शित- கூர்மையானவைகளாயும் உள்ள नखर- நகங்களால छिन्न- கொய்யப்பட்ட लोकेश- பிரம்மதேவனுடைய मुण्डः- தலையையுடையவனும் कम्राकार- அழகிய தோற்றத்தை உடைய ऊरुदण्डः - தண்டங்கள் போன்ற தொடைகளை உடையவனும் प्रलय - ப்ரளயகாலத்து हुतवह-அக்னியைப் போல प्रस्फुरद्- ஜ்வலிக்கின்ற बाहुदण्डः - சிறந்த புஜங்களை உடையவனும் चण्डीष्ट- பார்வதியின் விருப்பத்தை उद्योत- வெளிப்படுத்துவதில शौण्डः - ஸாமர்த்யமுள்ளவனும स्वभुज- தன்னுடைய புஜங்களால नियमित- கட்டுப்படுத்தப் பட்ட अखण्ड- பரிபூரணமான वाणीधवाण्डः- பிரம்மாண்டத் தையுடையவனும खण्डीभूत- துண்டாக்கப்பட்ட अरि- பகைவர்களையே मण्डः- ஆபரணமாக உடையவனும் प्रचण्डः- மிகுந்த கோபத்தையுடையவனும் விளங்கு கின்ற शम्भुः- பரமேசவரன் भवतां- உங்களுக்கு शर्म- ஸுகத்தை कलयतु- கொடுக்கட்டும்

பரமேச்வரன் தன்னுடைய சடைமுடியில் பிறைச சந்திரனை ஆபரணமாக அணிந்து கொண்டிருக்கிறான். அது ஆங்கு மிகுந்த ஒளியுடன் விளங்கிக் கொண்டிருக கின்றது அச சிவபெருமான் தன்னுடைய வெண்மை யாகவும் கூர்மையாகவும் உள்ள நகங்களால பிரமனுடைய தலையைக கொய்தெறிந்தான. அவனுடைய இரு தொடை களும் மிகுந்த அழகுடன் விளங்குகின்றன. அவனுடைய வலிமை வாய்ந்த புஜங்கள் பிரளயகாலத்து அகனியின் கொழுந்துகளபோல் ஜ்வலிககின்றன அவன் பரமேசவரி யின் அபீஷ்டங்களையெல்லாம நிறைவேற்றுவதில மிகுந்த சாமர்த்யம் வாய்ந்தவன. அவன் தன்னுடைய புஜங்களால உலகங்கள் எல்லாவற்றையும் அடக்கி ஆளகிறான். அழிக்கப்பட்ட பகைவர்களின் குழுககளே அவனது அணி களாக அமைகின்றன. மிகவும உக்ரமான அப் பரமேசவரன் உங்கள் எல்லோருக்கும் மிகுந்த இன்பத்தையளிக்கட்டும்.

ஶிவகேஶாதி பாதாந்த ஸ்துதி முற்றும்.

॥ श्रीः ॥

# ॥ श्रीमृत्युंजयमानसिकपूजास्तोत्रम् ॥

# ஸ்ரீ மிருத்யுஞ்ஜயமானஸிக பூஜா ஸ்தோத்திரம்.

[இது 46 சுலோகங்கள் கொண்டது. இதில 44 சுலோகங்கள பூஜை முறைகளைக் காணப்படுவதாகவும 45-வது சுலோகம பலசருதியாகவும 46-வது சுலோகம சிவலிங்கதாசனம, பஞ்சாக்ஷர ஜபம இவைகளைப்பறறிக் கூறுவதாகவும அமைந்துளளது. சாஸதிரங்களில் குறிபபிடட திரவியங்களை முறைபபடி பகவானிடம் அரபபணம செயவது தான பூஜை எனப்படும. இநத ஸமாபபணததையே உபசாரம எனறு கூறுவாாகள ஐநது உபசாரங்கள (பஞ்சோபசாரம) பதினாறு உபசாரங்கள (ஷோடசோபசாரம) 64 உபசாரங்கள (சதுஷ்ஷஷ்டி உபசாரங்கள) எனறு பலமுறைகள கூறபபட்டிருக்கின்றன. அநதநத உபசாரத்திற்காகக் கூறப்பட்டுள்ள திரவயங்களை எலலாம் சேகரித்து பகவன் மூாததியையும எதிரில இருத்தி முறைபபடி அநதநத திரவயததை அாப்பணம செயயவேணடும இது பாஹய பூஜை எனபபடும. இதைத் தவிர ஆநதர பூஜை எனபது ஒனறு உணடு. அதில திரவ்யங்களை சேகரிப்பதோ, மூாததியை எதிரில் வைத்துக் கொள்வதோ ஒன்றும கிடையாது எலலாவறறையும மனதாலேயே பாவனை செயவது. பாஹய பூஜையில எநத எந்தக் காரியங்கள் நடைபெறுகினறனவோ அவைகள எலலாவறறையும ஒனறையும விடாமல் மனதால நினைபபது. இதறகு மாநஸபூஜை எனறும பெயா. பலவிதமான ஆஹாரவகைகளை பாகம செயது ஸவாமியின எதிரில வைத்து மநதிரம் சொலலி நிவேதனம செயய வேண்டும. மானஸ பூஜையில் திரவயங்களை சேகரிபபதோ பாகம செயவதோ ஒனறும கிடையாது. எலலாவித ஆஹார வகைகளும எதிரில இருபபதாக பாவனைசெயது மனதாலேயே நிவேதனம செயயவேணடும. பாஹய பூஜையில அவனவன சக்திக்குத்தக்கபடிதான் திரவயங்களைச சேகரிக்கமுடியும. மானஸபூஜையில் எல்லாவித உயாநத திரவயங்களையும சிறிதும சிரமம இலலாமல பாவனை செயயலாம. இநத மானஸ பூஜா முறைகளை இநத ஸதோததிரத்தில ஆசாாயாள

காட்டுகிறார் இதில் 44 உபசாரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அர்த்த ஞானத்துடன் இந்த ஸ்தோத்திரத்தைப் படித்து இதில கூறியுளளபடி மனதால் பாவனை செயதால் பாஹ்ய பூஜை செய்த பலன கிடைக்கும் இதிலுள்ள சுலோகஙகளைக் கொண்டே பாஹ்யபூஜையும செயயலாம ஆனால பாஹ்ய பூஜையைவிட மானஸ பூஜை சிறநதது பகவானின் அருள் விரைவில கிடைககும. இதேமாதிரி த்ரிபுரஸுந்தரீ மானஸ பூஜா ஸ்தோத்திரமும பகவத்பாதாளால அருளபபட்டிருக கிறது ]

(அ) முதல சுலோகத்தால மனதில தியானம் செய்கிறார்.—

कैलासे कमनीयरत्नखचिते कल्पद्रुमूले स्थितं
कर्पूरस्फटिकेन्दुसुन्दरतनुं कात्यायनीसेवितम् ।
गङ्गातुङ्गतरङ्गरञ्जितजटाभारं कृपासागरं
कण्ठालंकृतशेषभूषणममुं मृत्युंजयं भावये ॥ १ ॥

கைலாஸே கமநீய ரத்ந கசிதே கலபத்ருமூலே ஸ்திதம்
கர்பூர ஸபடிகேந்து ஸுந்தர தநும காத்யாயநீ ஸேவிதம் ।
கங்கா துங்க தரஙக ரஞ்ஜித ஜடா பாரம் க்ருபா ஸாகரம்
கண்டாலங்கருத ஶேஷ பூஷணமமும் ம்ருத்யுஞ்ஜயம்
பாவயே ॥

**कैलासे**- கைலயங்கிரியில **कमनीय**- அழகிய **रत्न**- ரத்னங்களால **खचिते**- இழைக்கப்பட்ட **कल्पद्रुमूले** - கலப விருக்ஷத்தினடியில **स्थितं**- வீற்றிருககின்றவராயும் **कर्पूर**- பசசைககற்பூரம் **स्फटिक**- ஸ்படிகம் **इन्दु**- சந்திரன் இவை களைப்போல **सुन्दर**-அழகிய **तनुं** - சரீரததையுடையவராயும் **कात्यायनीसेवितं**- பார்வதீ தேவியால் ஸேவிககப்பட்டவராயும் **गङ्गा**- கஙகையின் **तुङ्ग**- உயரமான **तरङ्ग**- அலைகளால **रञ्जित**- அழகுபடுத்தப்பட்ட **जटाभारं**- ஜடைகளின் பாரத்தையுடைய வராயும் **कृपासागरं** - கருணைக்கடலாயும் **कण्ठालंकृत** - கழுத்தில் அலங்கரிக்கப்பட்டுள்ள **शेष**- ஆதிசேஷனாகிய **भूषणं**- ஆபரணத்தை உடையவராயும் உள்ள **अमुं**- அந்த **मृत्युंजयं**-

காலனை வென்ற பரமேச்வரனை भावये- தியானம் செய்கிறேன்.

பரமேச்வரன் மஹாகைலாஸத்தில் கற்பகவிருக்ஷத்தின் அடியில அமைக்கப்பட்டுள்ள ஓர் சிறந்த ரத்ன ஸிம்மாஸனத்தில் அமர்நதிருக்கின்ருன். அவனுடைய உடல் கற்பூரம், ஸ்படிகம், மதி இவைகளைப்போல வெண்மையாக விளங்குகின்றது அவனது அருகில அமர்ந்துள்ள பார்வதீ தேவி அவனுக்குப் பணியாறறுகின்ருள். அவனுடைய ஜடை மிகுந்த பாரமுடையது. அது ஆகாயத்திலிருந்து விழும் கங்கையைத்தாங்கி நிற்கின்றது. அந்நதியில் கிளம்பும் அலைகள் அவனுடைய ஜடையை அலஙகரிக்கின்றன. அவனே கருணைக்கடல. கடலில நதி கூடுவது இயறகைதானே அதுபோல கருணைக்கடலாகிய சிவனிடம் புனித நதியான கஙகை வநது சேர்கின்றது மேலும் இவனுடைய கழுத்து ஆதிசேஷ நாகததால அலங்கரிககப் பட்டுள்ளது கழுததில அணியப்படும் நகையில் இரத்தினங்கள் பதிககப்பட்டிருக்கும இநத ஸர்ப்பத்தின் சிரஸ்ஸிலும் நாகரத்னஙகள பிரகாசிக்கின்றன. இதனுல் நீலநிறம் வாயந்த பரமேச்வரனுடைய கழுத்து நன்கு அலங்கரிக்கப்பட்டுள்ளது இவ்வாறு விளங்கும் காலனை வென்ற காலகாலனை நான் என்னுடைய மனதில் தியானம் செய்கின்றேன். (1)

(அ) தன் பூஜையை ஏறறுக்கொள்ள எதிரில் வரும்படி அழைக்கிருர்:—

आगत्य मृत्युंजय चन्द्रमौले व्याघ्राजिनालंकृतशूलपाणे ।
स्वभक्तसंरक्षणकामधेनो प्रसीद विश्वेश्वर पार्वतीश ॥

ஆகத்ய ம்ருத்யுஞ்ஜய சந்த்ர மௌளே
வ்யாக்ராஜிநாலங்க்ருத ஶூல பாணே ।
ஸ்வபக்த ஸம்ரக்ஷண காமதேநோ
ப்ரஸீத விஶ்வேஶ்வர பார்வதீஶ ॥

**मृत्युञ्जय**-யமனை வென்றவனே, **चन्द्रमौले**-பிறைச் சந்திரனைத் தலையில தரித்திருக்கின்றவனே, **व्याघ्राजिन**-

புலித்தோலால் अलंकृत-அழகுபடுத்தப்பட்டவனே, शूलपाणे-சூலத்தைக் கையில ஏந்தியவனே, स्वभक्त-தன்னுடைய, பக்தர்களை, संरक्षण-நன்கு காப்பதில், कामधेनो-காமதேனு வாக இருப்பவனே, विश्वेश्वर-உலகஙகளையெல்லாம் ஆட்சி செய்கின்றவனே, पार्वतीश-பார்வதியின் பதியே, आगत्य-வந்து, प्रसीद-அருள்புரிவாயாக.

இங்கு மானஸ பூஜைக்காகப் பரமேச்வரனை தன் முன் வரும்படி அழைக்கிறார் யமனை வென்ற இறைவனே, பிறைச்சந்திரனைச் சடையில தரிக்கும் தலைவனே. புலித் தோலை அணிவதால் அழகுடன் விளங்குபவனே, சூலந் தாங்கிய கையையுடையவனே, தன்னுடைய பக்தர்களைக் காத்தருளும் காமதேனுவே உலகனைத்தும் ஆட்சிசெய்யும் பார்வதீபதியே என்னிடம வந்து எனக்கு அருளபுரிவாயாக

இங்கு பரமேசவரனைக் காமதேனுவென்று உருவகப் படுத்திக் கூறப்பட்டிருப்பது குறிப்பிட ததககது காமதேனு அபீஷடங்களையெலலாம் அளிககும சக்தி வாய்நதது. அவ்வாறே சிவபெருமானும் அன்பர்களுககு வேணடியவை எலலாம் அளிக்கவலலவன் மேலும் அவன் பக்தன் பாலுள்ள அன்புப்பெருக்கால தாயும் ஆனவன். ஆதலால அப்பரமேசவரனை இஙகு ஸதிரீயாக விளங்கும் காமதேனு என வர்ணிததிருக்கினறார். ம்ருத்யுஞ்ஜய என்று அழைக்கப் படுவதால் அவன் பக்தாகளுககு ஏறபடும் யமபாதையை அகற்றுவான் என்றும், சநதிரமௌளே என்று கூப்பிடு வதால அவன் அவர்களுக்கு ஏறபடும கிலேசங்களைப்போக்கி அவர்களின் மனதைக் குளிரசசெய்வான் எனறும், வ்யாக் ராஜிநாலங்க்ருத என்பதால மனதை அடங்கச செய்து மோக்ஷத்தையளிப்பவனென்றும், சூலபாணே என்பதால் பக்தர்களின் பகைவர்களை அவன் நாசம செய்வான் என்றும் பாாவதீச என்பதால் அவன் எலலாவற்றையும் ஆக்க வல்லவன் என்றும் நன்கு வெளிப்படுகின்றது. தனக்குப் பரிபூர்ண அருள் கிடைக்க பார்வதியுடன் சோந்த மஹேசு வரனை அழைக்கிறார். (2)

(அ) ஆஸனம் என்ற உபசாரத்தைக் கூறுகின்றார்:—

भास्वन्मौक्तिकतोरणे मरकतस्तम्भायुतालंकृते
सौधे धूपसुवासिते मणिमये माणिक्यदीपाञ्चिते ।
ब्रह्मेन्द्रामरयोगिपुंगवगणैर्युक्ते च कल्पद्रुमैः
श्रीमृत्युञ्जय सुस्थिरो भव विभो माणिक्यसिंहासने ॥

பாஸ்வன் மௌக்திக தோரணே மரகத
ஸதம்பாயுதாலங்க்ருதே
ஸௌதே தூப ஸுவாஸிதே மணிமயே மாணிகய
தீபாஞ்சிதே।
ப்ரஹ்மேந்த்ராமர யோகி புங்கவ கணைர் யுக்தே ச
கலபத்ருமை:
ஸ்ரீ மருத்யுஞ்ஜய ஸுஸ்திரோ பவ விபோ மாணிக்ய
ஸிமஹாஸநே ॥

**भास्वत्** -ஒளிகள் பொருநதிய, **मौक्तिक**-முத்துக்களாலா கிய, **तोरणे**-தோரணஙகளையுடையதும், **मरकतस्तम्भायुतालंकृते**-பதினுயிரக்கணக்கான மரகதத்தூண்களால அலங்கரிக்கப் பட்டதும், **धूपसुवासिते**-தூபங்களின் நறுமணம் கமழுமபடி செய்யப்பட்டதும், **मणिमये**-இரத்தினங்களால இழைககப் பட்டதும், **माणिक्यदीप**இரத்தின தீபங்களால், **अञ्चिते**-ஜ்வலிக் கும்படி செய்யப்பட்டதும், **ब्रह्मेन्द्र**-பிரம்மா, இந்திரன் முதலிய, **अमर**-தேவர்களாலும, **योगिपुङ्गवगणै** -சிறநத யோகி களுடைய கூட்ட ங்களாலும், **युक्ते**-சூழப்பட்டதும், **कल्पद्रुमैः**-கலபவிருக்ஷங்களுடன், **युक्ते च**-கூடியதுமான, **सौधे**-அரண்மனையில், **माणिक्यसिंहासने**-இரத்தின ஸிம்மாஸனத் தில, **मृत्युञ्जय**-காலனைவென்ற பரமேசவரனே, **विभो**-எங்கும் நிறைந்த பரம்பொருளே, **सुस्थिरो भव**-நன்கு நிலைத்து நிற்பாயாக.

எங்கும் நிறைந்த பரமபொருளான பரமேச்வரனுக்கு மனதால ஆஸனம் அளித்து உபசரிக்கப்படுகின்றது. இது மாணிக்கக் கற்களால அமைக்கப்பட்ட ஸிம்மாஸனம இது ஓர் சிறநத அரண்மனையினுள் போடப்பட்டுள்ளது. அவ்

வரண்மணி ஒளி பொருந்திய நலமுத்துக்கள் கோர்த்த தோரணங்களால அலங்கரிககப்பட்டுள்ளது. அதனுள் மரகதக கறகளால் இழைக்கப்பட்ட ஆயிரம் தூண்களை உடைய மனோஹரமான மணடபம் இருக்கின்றது அந்த மணடபததில அகரு முதலிய வாசனை திரவ்யஙகளிலிருந்து கிளமபும தூபஙகளால மிகுநத நறுமணம் நிரம்பியிருக் கின்றது மேலும் ஆயிரக்கணககான இரத்தின தீபங்கள அங்கு ஜ்வலிககின்றன. அஙகு அனைவருடைய அபீஷ்டங் களையும நிறைவேறறும கலபக விருக்ஷங்கள விளங்கு கின்றன மேலும் பிரம்மா இநதிரன் முதலிய தேவாகளும் சிறநத யோகிகளும அஙகு நிறைந்துள்ளனர். இவ்வாறு விளங்கும் ஆயிரக்கால மண்டபத்தின் நடுவில் அமைக்கப் பட்டுளள மாணிகக ஸிமமாஸனத்தில எஙகும் நிறைநத பரமபொருள் அமாநதருளும்படி பிரார்த்திக்கபபடுகின்றது. முதலில தயானம செயது பிறகு அவரை அழைத்து ஆஸனம் அளிககபபடுகிறது ஸாதாரணமாகப் பூஜைகளில தியானத்திறகுபபிறகு 'ஆவாஹனம' செய்து தான் ஆஸனம கொடுபபது வழக்கம். இங்கு 'ஆவாஹனம்' கூறப்படவிலலை. ஏனெனில லிங்கம, பிமபம், முதலியவை களில பூஜை செய்யுமபொழுதுதான் அதில பகவத் ஸாநநிதயம ஏறபடுவதறகாக ஆவாஹனம செயய வேண்டும. மானஸபூஜையில எலலாம பாவனைதான். பகவானே எதிரில வநது இருப்பதாக பாவனை செய்து பூஜை செய்வதால மற்றோ பிமபததில ஆவாஹனம் செயய வேண்டியது அவசியமிலலை (3)

(அ) 'பாத்யம்' என்ற உபசாரம் கூறப்படுகின்றது:—

मन्दारमल्लीकरवीरमाधवीपुन्नागनीलोत्पलचम्पकान्वितैः ।
कर्पूरपाटीरसुवासितैर्जलैराधत्स्व मृत्युञ्जय पाद्यमुत्तमम् ॥ ४ ॥

மநதார மலலீ கரவீர மாதவீ
புந்நாக நீலோத்பல சம்பகாந்விதை: ।
கர்பூர பாடீர ஸுவாஸிதைர் ஜலை-
ராதத்ஸ்வ ம்ருத்யுஞ்ஜய பாத்யமுத்தமம் ॥

**मृत्युञ्जय**-யமனை வென்ற பெருமானே, **मन्दार**-மந்தாரை, **मल्ली**-மல்லிகை, **करवीर**-அரளி, **माधवी**-மாதவீ, **पुन्नाग**-புந்நாகம் **नीलोत्पल** – கருநெய்தல், **चम्पक**-சம்பகம் இந்த மலர்களுடன், **अन्वितैः**–கூடியவைகளாயும், **कर्पूर**-பச்சைக கற்பூரம், **पाटीर**-சந்தனம் இவற்றால, **सुवासितैः**–நறுமண முள்ளதாகச்செய்யப்பட்டவைகளாயும் விளங்குகின்ற, **जलैः**-தீர்த்தங்களால, **उत्तमं**–சிறந்த, **पाद्यं**–பாத்யத்தை, **आधत्स्व**-பெற்றுக்கொள்வாயாக.

அமரருள்சிறந்த பரமேசவரனை ஆஸனத்தில அமர்த்திய பின்னர் பாதங்களைக கழுவிக்கொளவதறகாக அவனுக்கு பாத்யம் அளிககப்படுகின்றது. அது மந்தாரம, மலலிகை, அரளி, மாதவீ, புந்நாகம, நீலோதபலம், சம்பகம் முதலிய நறுமணம கமழும அருமலர்கள் நிறைந்தது. மேலும் கற்பூரம சந்தணம முதலியவறறால அது மிகவும குளிர்சசியாகச செய்யப்பட்டுளளது. அவ்வாறு விளங்கும பாதயத்தை ஏறறு அருளவேணடுமென்று காலகாலனைக கேட்டு கொள்கிறார் சங்கரபகவதபாதா. (4)

(அ) அர்கயம் என்ற உபசாரம் கூறப்படுகிறது:—

**सुगन्धिपुष्पप्रकरैः सुवासितैर्वियन्नदीशीतलवारिभिः शुभैः ।**
**त्रिलोकनाथार्तिहरार्घ्यमादराद् गृहाण मृत्युञ्जय सर्ववन्दित ॥**

ஸுகந்தி புஷ்ப ப்ரகரைः ஸுவாஸிதைர்
வியந்நதீ ஶீதள வாரிபிः ஶுபைः ।
த்ரிலோகநாதார்த்திஹரார்க்யமாதராத்
க்ருஹாண ம்ருத்யுஞ்ஜய ஸர்வவந்தித ॥

**त्रिलोकनाथ**-மூவுலகையும காத்தருள்பவனே, **आर्तिहर**-துன்பங்களை நீககுகின்றவனே, **मृत्युञ्जय**-யமனைவென்றவனே **सर्ववन्दित**-எலலோராலும வணங்கபபட்டவனே, **सुगन्धिपुष्पप्रकरैः**-நறுமணம கமழும் மலாகளின கூட்டத்தால, **सुवासितैः**-நல்மணம தவழும்படி செயயப்பட்டதாயும், **शुभैः**–மங்கள மானதாயும உளள, **वियन्नदी**-கஙகையின், **शीतलवारिभिः**–

குளிர்ந்த ஜலங்களாலான, अर्घ्यं-அர்கயத்தை, आदरात्-ப்ரீதியுடன், गृहाण-பெறறுககொள்.

மூன்று உலகங்களையும காத்தருளபவனே! பகதர்களின் துனபங்களனைத்தையும நீககுபவனே! அனைவராலும் போறறப்படுகினறவனே, யமனை வென்ற எமபெருமானே! நறுமணம் கமழும் மலாகள நிறைநததும், சிறநத வாசனை பொருநதியதும் நன்மையளிககும தனமை வாயநததுமான கங்காநதியின் குளிாநத ஜலங்களைக் கொண்டு என்னுல அளிக்கப்படும் அர்கயததை ஆதரவுடன் ஏற்றுக கொளவாயாக. (5)

(அ) ஆசமனத்தால உபசரிக்கிறுர் :—

हिमाम्बुवासितैस्तोयैः शीतलैरतिपावनैः ।
मृत्युञ्जय महादेव शुद्धाचमनमाचर ॥ ६ ॥

ஹிமாமபுவாஸிதைஸதோயை: ஶீதளைரதிபாவனை: ।
மருத்யுஞ்ஜய மஹாதேவ ஶுத்தாசமநமாசர ॥

मृत्युञ्जय-யமனைவென்றவனே, महादेव-பரமேசுவரனே, हिमाम्बुवासितैः-பன்னீரால வாசனையுள்ளதாகச செய்யப் பட்டவைகளாயும், शीतलैः-குளிாநதவைகளாயும, अतिपावनैः-மிகுநத பரிசுத்தமானவைகளாயும உள்ள, तोयैः-ஜலஙகளால शुद्धाचमनं-புனிதமான ஆசமனததை, आचर-செய்வாயாக.

யமனை வென்றவனே! மஹாதேவனே! நான் உனக்கு நல்ல நறுமணம் வாயநததும், பன்னீர் நிறைநததும, பரிசுத்தமானதும், குளிாசசி மிகுந்ததுமான தண்ணீரைத் தருகின்றேன். அதனுல நீ ஆசமனம் செய்திடுவாயாக. (6)

(அ) பரமேசவரனுக்கு மதுபர்க்கம் அளிக்கப்படு கின்றது:—

गुडदधिसहितं मधुप्रकीर्णं सुघृतसमन्वितधेनुदुग्धयुक्तम् ।
शुभकर मधुपर्कमाहर त्वं त्रिनयन मृत्युहर त्रिलोकवन्द्य ॥ ७ ॥

குட ததி ஸஹிதம் மது ப்ரகீர்ணம்
ஸுகருத ஸமந்வித தேனுதுகத யுகதம் ।
பமுபகர மதுபாகமாஹர தவம
த்ரிநயந மருத்யுஹர தரிலோக வநத்ய ॥

**गुडदधिसहितं**-வெலலம தயிர் இவைகளுடன் கூடியதும் **मधुप्रकीर्णं**-தேன் கலநததும, **सुघृतसमन्वित**-நலல நெய்யுடன் கூடிய, **धेनुदुग्ध**-பசுமபாலுடன, **युक्तम्**-சோந்ததுமான, **मधुपर्कं**-மதுபாககத்தை, **शुभकर**-நன்மை செயகின்றவனே, **त्रिनयन**-மூன்று கணகளுடையவனே, **मृत्युहर**-சாவைப் போக்குகின்றவனே, **त्रिलोकवन्द्य**-மூவுலகததோராலும வணங் கத்தககவனே, **त्वं**-நீ, **आहर**-ஏறறுக்கொளவாயாக

சாவைப்போககி மூவுலகையும் காத்தருளும் முககணணு, நான உமககு வெலலம், தயிா, தேன், நலல நெய, பசுமபால இவைகள் கலநத மதுபாககத்தை அளிக கின்றேன். அதை ஏறறருளபுரிவாயாக. தேன் கலந்திருப் பதால மதுபாககம் என்றுபெயா. (7)

(அ) பஞ்சாமிருத ஸ்நனம:—

**पञ्चास्त्रशान्त पञ्चास्य पञ्चपातकसंहर ।**
**पञ्चामृतस्नानमिदं कुरु मृत्युञ्जय प्रभो ॥ ८ ॥**

பஞசாஸத்ர ஸாந்த பஞசாஸய பஞசபாதக ஸம்ஹர ।
பஞசாமருத ஸ்நாநமிதம குரு ம்ருத்யுஞஜய ப்ரபோ ॥

**पञ्चास्त्रशान्त**-ஐந்து பாணங்கள கொண்ட காமனை அடக்கியவனே, **पञ्चास्य**-ஐந்து முகஙகள கொண்டவனே, **पञ्चपातकसंहर**-ஐமபெரும் பாவங்களை அழிப்பவனே, **मृत्युञ्जय**-யமனை வென்றவனே, **प्रभो**-வன்மை வாயநதவனே, **इदं**-இந்த, **पञ्चामृतस्नानं**-ஐந்தமுதஙகளின் நீராடலை, **कुरु**-செய்வாயாக.

அரவிந்தம், அசோகம், சூதம், நவமலலிகை, நீலோத் பலம் என்ற ஐநது மலர்களும் காமனுககு ஐந்து பாணங்கள்

ஐந்து பாணங்களை கொண்ட காமனும் சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து கிளம்பிய தீப்பொறியில் சாம்பலாகி விட்டான். ஸத்யோஜாதம், வாமதேவம், அகோரம், தத்புருஷம், ஈசானம் என்ற ஐந்து முகங்கள் கொண்டவன். ஐம்பெரும் பாவங்களை அழிப்பவன், யமனை வென்ற வல்லன். யான் உனக்கு ஐந்து இனிய பொருள்களாலான பஞ்சாமிருத ஸ்நானத்தைச் செய்விக்கின்றேன். அதை நீ ஏற்றருள் புரிவாயாக. பால், தயிர், நெய், வெல்லம், தேன் இவ்வைந்தும் கலந்தது பஞ்சாமிருதம். (8)

(அ) சுத்த தீர்த்த ஸ்நானம்—

जगत्त्रयीख्यात समस्ततीर्थसमाहृतैः कल्मषहारिभिश्च ।
स्नानं सुतोयैः समुदाचर त्वं मृत्युञ्जयानन्तगुणाभिराम ॥ ९ ॥

ஜகத்த்ரயீக்யாத ஸமஸ்ததீர்த்த
ஸமாஹ்ருதை: கல்மஷஹாரிபிஶ்ச ।
ஸ்நாநம் ஸுதோயை: ஸமுதாசர த்வம்
ம்ருத்யுஞ்ஜயாநந்தகுணாபிராம ॥

**जगत्त्रयीख्यात**–மூவுலகத்திலும் பிரசித்திபெற்றவனே, **अनन्तगुणाभिराम**–எல்லையற்ற குணங்களால் அழகுவாய்ந்தவனே, **मृत्युञ्जय**–யமனைவென்ற பரமேச்வரனே, **त्वं**–நீ **समस्ततीर्थ**–எல்லாப் புண்ய தீர்த்தங்களிலிருந்தும், **समाहृतैः**-கொண்டுவரப்பட்டவைகளாயும், **कल्मषहारिभिः**-பாவங்களைப் போக்குகின்றவைகளாயுமுள்ள, **सुतोयैः**–நல்ல ஜலங்களால், **स्नानं**–நீராடுதலை, **समुदाचर**–நன்கு செய்தருளவாயாக.

மூவுலகங்களிலும் புகழ்பெற்றவனே, எல்லையற்ற குணங்களால் அனைவருக்கும் மனோஹரமாகத் தோற்றமளிக்கும் வள்ளலே, காலனை வென்ற கொற்றவனே! நான் உமது ஸ்நாநத்திற்காகப் பல புண்யதீர்த்தங்களிலிருந்து தண்ணீரைச் சேகரித்து வைத்திருக்கிறேன். அந்த தீர்த்தம் ஸகல பாவங்களையும் போக்கும் தன்மை வாய்ந்தது. அந்நீரில் நீ ஸ்நாநம் செய்வாயாக. (9)

आनीतेनातिशुभ्रेण कौशेयेनामरद्रुमात् ।
मार्जयामि जटाभारं शिव मृत्युञ्जय प्रभो ॥ १० ॥

ஆநீதேநாதிஶுப்ரேண கௌஶேயேநாமர தருமாத் ।
மாார்ஜயாமி ஜடாபாரம் ஶிவ ம்ருத்யுஞ்ஜய ப்ரபோ ॥

शिव–நன்மை அளிக்கின்றவனே, मृत्युञ्जय–யமனை வென்றவனே, प्रभो–வன்மை வாய்ந்தவனே, अमरद्रुमात्–கல்பவிருக்ஷத்திலிருந்து, आनीतेन–கொண்டுவரப்பட்ட, अतिशुभ्रेण–மிகவும் வெளுப்பான, कौशेयेन-பட்டு வஸ்திரத்தால், जटाभारं-உமது திருச்சடைகளை, मार्जयामि-துடைடுகின்றேன்

நீராடிய பின்னர் பரமேசவரனுடைய சடைகளைத் துவட்டுகிறார் ஏ சிவபெருமானே, யமனை வென்ற பிரபுவே! கல்பவிருக்ஷத்தை வேண்டி, அது கொடுத்து அங்கிருந்து கொண்டுவரப்பட்ட மிகத் தூய்மையான வெண்பட்டால் உம்முடைய பெருஞ் சடைக்கூட்டத்தை யான் துடைத்து விடுகின்றேன். (10)

(அ) சிறந்த வஸ்திரங்களால் உபசரிக்கிறார் —

नानाहेमविचित्राणि चीरचीनाम्बराणि च ।
विविधानि च दिव्यानि मृत्युंजय सुधारय ॥ ११ ॥

நாநா ஹேம விசித்ராணி சீர சீநாமபராணி ச ।
விவிதானி ச திவ்யானி ம்ருத்யுஞ்ஜய ஸுதாரய ॥

मृत्युंजय- யமனை வென்றவனே, नानाहेमविचित्राणि அநேகம் தங்கமயமான ஜரிகையுடன் கூடி அதிசயிக்கத்தக்கவைகளும் विविधानि च-பலவிதமானவைகளும் दिव्यानि– சிறந்தவைகளுமான, चीरचीनाम्बराणि- மரவுரிகளையும் பட்டு வஸ்திரங்களையும் सुधारय- நன்கு தரித்துக்கொள்.

யமனை வென்றவனே, தங்க ஜரிகை சேர்ந்து அதிசய வேலைப்பாடமைந்த பலவிதமான சிறந்த அநேகம் பட்டு வஸ்திரங்களையும் மரவுரிகளையும் அர்ப்பணம் செய்கிறேன். இவைகளை தரித்துக் கொள்வாயாக. (11)

(அ) உபவீதம் :—

विशुद्धमुक्ताफलजालरम्यं मनोहरं काञ्चनहेमसूत्रम् ।
यज्ञोपवीतं परमं पवित्रमाधत्स्व मृत्युञ्जय भक्तिगम्य ॥ १२ ॥

விஶுத்த முக்தா பல ஜால ரம்யம்
மனோஹரம் காஞ்சன ஹேம ஸூத்ரம் ।
யக்ஞோபவீதம் பரமம் பவித்ரம்
ஆதத்ஸ்வ ம்ருத்யுஞ்ஜய பக்திகம்ய ॥

**भक्तिगम्य**-பக்தியால் அடையத்தகுந்தவனே, **मृत्युञ्जय**-யமனை வென்றவனே, **विशुद्ध**-களங்கமற்ற, **मुक्ताफल**-நல் முத்துக்களின், **जाल**-சரங்களால், **रम्य**-அழகு வாய்ந்ததும், **मनोहरं**-மனதைக் கவரக்கூடியதும், **काञ्चनहेमसूत्रं**-தங்கத்தால் செய்யப்பட்ட சரட்டையுடையதும், **परम पवित्रं**-மிகவும் புனிதமானதுமான, **यज्ञोपवीतं**-பூநூலை, **आधत्स्व**-ஏற்றுக் கொள்வாயாக.

பக்தியால் அடையத்தகுந்தவனே! யமனை வென்ற ப்ரபுவே! உனக்கு நான் சிறந்த பூநூலை அணிவிக்கிறேன். அது மிகவும் புனிதமானது களங்கமற்றது நல்ல முத்துக்கள் கோர்க்கப்பட்டது மிகவும் அழகு வாய்ந்தது மனதைக்கவரும் சக்தி பெற்றது. இவ்வாறு விளங்கும் தங்கப்பூநூலைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும். இந்த சுலோகத்தின் மூன்றாவது அடியில் யக்ஞோபவீததாரண மந்திரத்தின் ஓர் பகுதி காணப்படுகிறது (12)

(அ) சந்தனத்தால் உபசரிக்கிறார்:—

श्रीगन्धं घनसारकुङ्कुमयुतं कस्तूरिकापूरितं
कालेयेन हिमाम्बुना विरचितं मन्दारसंवासितम् ।
दिव्यं देवमनोहरं मणिमये पात्रे समारोपितं
सर्वाङ्गेषु विलेपयामि सततं मृत्युञ्जय श्रीविभो ॥ १३ ॥

ஸ்ரீகந்தம் கநஸார குங்கும யுதம் கஸ்தூரிகா பூரிதம்
காலேயேன ஹிமாம்புநா விரசிதம் மந்தார ஸம்வாஸிதம்

திவ்யம் தேவ மனோஹரம் மணிமயே பாத்ரே ஸமாரோபிதம்
ஸர்வாங்கேஷு விலேபயாமி ஸததம் ம்ருத்யுஞ்ஜய
ஸ்ரீ விபோ ||

**मृत्युञ्जय**-யமனை வென்றவனே, **श्रीविभो**-எங்கும் நிறைந்துள்ள பரமேச்வரனே, **घनसारकुंकुमयुतं**-பச்சைககற்பூரம், குங்குமப்பூ, இவைகளுடன் கூடியதாயும், **कस्तूरिकापूरितं**-கஸ்தூரி நிறைந்ததாயும், **कालेयेन**-சந்தணததாலும், **हिमाम्बुना**-பன்னீராலும், **विरचितं**-செய்யப்பட்டதாயும், **मन्दारसंवासितं**-மநதாரமலரால நறுமணமுடையதாகச செய்யப்பட்டதாயும், **दिव्यं**-திவ்யமானதாயும், **देवमनोहरं**-தேவர்களுடைய மனதை வசீகரிககிறதாயும, **मणिमये**-இரத்தினத்தால் இழைககப்பட்ட, **पात्रे**-பாத்திரத்தில், **समारोपितं**-வைக்கப்பட்டதாயுமுள்ள, **श्रीगन्धं**-வாசனைச் சந்தணததை, **सततं**-எப்பொழுதும், **सर्वाङ्गेषु**-எல்லா அங்கங்களிலும், **विलेपयामि**-பூசிவிடுகிறேன்.

காலனை வென்ற பரமேச்வரனே ! உமக்காக நான் நலல மணமுள்ள சந்தணத்தை அரைத்து ரத்னத்திறைல் இழைக்கப்பட்ட பாத்திரத்தில வைத்திருககிறேன். அது கற்பூரம், குங்குமம், கஸ்தூரி இவைகளுடன் கூடியது. நலல பன்னீரால் கரைக்கப்பட்டுள்ளது சிறந்த மந்தார மலர்களால மிகக வாசனையுள்ளதாகச் செய்யப்பட்டுள்ளது. திவ்யமான இசசந்தணம் தேவர்களின் மனதை வசீகரிக்கும் இயல்புளளது இவவாறு விளங்கும இச்சந்தணத்தை நான் உடல் முழுவதும அள்ளிப்பூசுகிறேன். (13)

(அ) அக்ஷதையால் உபசாரம்:—

**अक्षतैर्धवलैर्दिव्यैः सम्यक्तिलसमन्वितैः ।**
**मृत्युञ्जय महादेव पूजयामि वृषध्वज ॥ १४ ॥**

அக்ஷதா தவலைர் திவ்யை: ஸம்யக்திலஸமந்விதை: |
ம்ருத்யுஞ்ஜய மஹாதேவ பூஜயாமி வ்ருஷத்வஜ ||

**मृत्युञ्जय**-காலனை வென்றவனே, **महादेव**-மஹாதேவனே, **वृषध्वज**-காளைக் கொடியோனே, **धवलैः**-வெளுப்பானவை

களாயும், **दिव्यैः**–திவ்யமானவைகளாயும், **तिलसमन्वितैः**–எளளுடன் கூடியவைகளாயுமுள்ள, **अक्षतैः**–அக்ஷதைகளால் **सम्यक्**–நன்கு, **पूजयामि**–பூஜிக்கின்றேன்.

காலனை வென்றவனே! விருஷபத்தை அடையாள மாகக் கொண்டவனே! பரமேசவரனே! நான் சிறந்தவை களாயும், வெணமை வாயந்தவைகளாயும், எள்ளுடன் கூடியவைகளாயும உளள அக்ஷதைகளால உம்மைப் பூஜிக்கிறேன். (14)

(அ) புஷ்போபசாரம்:—

**चम्पकपङ्कजकुरवककुन्दैः करवीरमल्लिकाकुसुमैः ।**
**विस्तारय निजमकुटं मृत्युञ्जय पुण्डरीकनयनाप्त ॥ १५ ॥**

சம்பக பஙகஜ குரவக குநதை: கரவீர மலலிகா குஸுமை.
விஸதாரய நிஜ மகுடம் ம்ருதயுஞ்ஜய புணடரீக நயநாப்த ॥

**पुण्डरीकनयनाप्त**–செந்தாமரைக கண்ணனின் நண்பனே, **मृत्युञ्जय**–யமனை வென்றவனே, **चम्पकपङ्कजकुरवककुन्दैः**–சம்பகம, தாமரை, மருதாணி, குநதம் இநத மலர்களாலும் **करवीरमल्लिकाकुसुमैः**–அரளி, மலலிகை முதலிய மலாகளாலும் **निजमकुटं**–உம்முடைய கிரீடத்தை, **विस्तारय**–பெரியதாகச் செய்துகொள்.

செந்தாமரைகளைப் போன்ற அழகு வாய்ந்த கண்களை உடைய மஹா விஷ்ணுவின் நணபனே! யமனை வென்ற வனே! நான் உமது கிரீடத்தினமேல சமபகம, தாமரை, மருதாணி, குந்தம, அரளி, மலலிகை முதலிய பல மலா களைத் தூவுகிறேன். அம் மலாகளால உன் தலையில விளஙகும் மணிமகுடம் மிகவும் பெரியதாக விளஙகட்டும.

(அ) மணி பாதுகைகளில திருப்பாதங்களை வைக்கும் படி பிரார்த்திககிறுா:—

**माणिक्यपादुकाद्वन्द्वे मौनिहृत्पद्ममन्दिरे ।**
**पादौ सत्पद्मसदृशौ मृत्युञ्जय निवेशय ॥ १६ ॥**

மாணிக்ய பாதுகா தவநதவே மௌனி ஹ்ருத் பதம மநதிரே
பாதௌ ஸத்பதம ஸதருஸௌ மருத்யுஞ்ஜய நிவேஸய ॥

मृत्युञ्जय-யமனை வென்றவனே, मौनिहृत्पद्ममन्दिरे-முனிவர்களின் தாமரைபோன்ற இருதயமாகிய ஆலயத்தில், माणिक्यपादुकाद्वन्द्वे-மாணிக்க ரதனங்கள பதித்த இரு பாதுகைகளில, सत्पद्मसदृशौ-சிறநத தாமரைகளுக்கு ஒப்பான, पादौ-உன் இரு திருபபாதங்களை, निवेशय-வைப்பாயாக

யமனை வென்றவனே! முனிவாகள உன்னை அனவரதமும தியானம் செய்கிறாகள. அவாகள உன்னை வர வேறபதறகாகத தஙகளுடைய இருதய கமலத்தில இரு ரத்னப் பாதுகைகளை யமைதது வைத்திருககிறார்கள. அவர்களுடைய இருதய கமலமே இரத்தினக கறகளால அமைககப்பட்ட திருககோவில. அக கோவிலில அமைக்கப்பட்டு இருக்கும இரு பாதுகைகளின் மேலும் உனது திருப்பாதங்களை வைத்தருள்வாயாக. அவர்களுடைய இதயமாகிய கோவிலில குடிகொண்டு அவர்களைக காததருள்வாயாக.

(அ) பலவித ஆபரணங்களால் பகவானை அலங்கரிக்கிறார் :—

माणिक्यकेयूरकिरीटहारैः काञ्चीमणिस्थापितकुण्डलैश्च ।
मञ्जीरमुख्याभरणैर्मनोज्ञैरङ्गानि मृत्युञ्जय भूषयामि ॥ १७ ॥

மாணிக்ய கேயூர கிரீட ஹாரை· காஞ்சீ மணி ஸதாபித
குணடலைஶ்ச ।
மஞ்ஜீர முக்யாபரணைர் மனோக்ஞைரங்கானி
ம்ருத்யுஞ்ஜய பூஷயாமி ॥

मृत्युञ्जय-யமனை வென்றவனே, माणिक्य-மாணிககக் கல்பதித்த, केयूर-தோளவளைகள், किरीट-மகுடம, हारैः-முத்துமாலைகள இவைகளாலும, काञ्ची-இடுப்புப் பட்டிகை, मणिस्थापित-இரத்தினஙகள் பதிககப்பட்ட, कुण्डलैः-குண்டலங்களாலும், मनोज्ञैः-மனதைக் கவரக்கூடிய, मञ्जीर-

**मुख्याभरणैः च**–கால்சசிலம்பு முதலிய சிறந்த ஆபரணங்களாலும், **अङ्गानि**–உன் அங்கஙகளே, **भूषयामि**-அலங்கரிக்கிறேன்.

யமனே வென்றவனே, நான் உன்னுடைய எலலா அங்களேயும் மனதைக கவரும் சிறந்த ஆபரணஙகளால அலங்கரிககின்றேன். உன்னுடைய சிரஸில மணி மகுடத்தை வைக்கிறேன். உன்னுடைய செவிகளில இரத்ன குண்டலஙகளேயும், தோள்களில சிறந்த வளேகளேயும், கழுத்தில முத்து மாலேகளேயும், இடுப்பில இரதனங்கள பதித்த படடிகையையும், காலகளில ஒலி மிகுநத சிலம்புகளேயும் அணிவிக்கிறேன். (17)

(அ) விநாயகர், குஹர் இவ்விரு தனயர்களும் பகவானுக்கு சாமரம் வீசுவதாக தியானிககிருர் :—

**गजवदनस्कन्दधृतेनातिस्वच्छेन चामरयुगेन ।**
**गलदलकाननपद्मं मृत्युञ्जय भावयामि हृत्पद्मे ॥ १८ ॥**

கஜவதந ஸகந்த த்ருதேநா திஸ்வசசேந சாமர யுகேந ।
கலதலகாநந பத்மம் ம்ருத்யுஞ்ஜய பாவயாமி ஹ்ருத்பத்மே ॥

**मृत्युञ्जय**–யமனே வென்றவனே, **गजवदन**–யானேமுகத்தோனுன விநாயகா, **स्कन्द**–குஹர் இவவிருவர்களாலும், **धृतेन**–பிடித்துககொள்ளப்படடதும், **अतिस्वच्छेन**–மிகவும் வெளுப்பானதுமான, **चामरयुगेन**–இரு சாமரஙகளால், **गलद्**-கலேகின்ற, **अलकाननपद्मं**–கேசஙகளுடன்கூடிய தாமரை போன்ற முகமுள்ள உம்மை, **हृत्पद्मे**–என்னுடைய ஹிருதய பத்மத்தில், **भावयामि**–தயானம் செய்கின்றேன்.

யமனே வென்ற பரமேசவரனே! உமது திருக்குமாரர்களான விநாயகனும், குமரனும் உனககுப் பணியாறறுகிருர்கள. அவர்களிருவரும் அழகிய வெண்சாமரங்களேத் தங்களுடைய கைகளில் ஏநதி வீசுகிருர்கள. அங்ஙனம் செய்கையில உமது சிரஸில விளஙகும் திருசசடைகள் அசைந்து உமது முகத்தின்மீது படிகின்றன. அவ்வாறு

சடைகள் உம்முகததில படியும்பொழுது தாமரை போன்ற உம் முகம் பாசிகளுககிடையில் தோன்றும் பொற்றாமரை போல பொலிவுடன் விளங்குகின்றது. அவ்வாறான உமது முகபத்மத்தை என்னுடைய இருதய கமலத்தில இறுத்தி வழிபடுகிறேன். (18)

(அ) சவேதசசத்ரத்தை (வெண்குடையை) அர்ப்பணம் செயகிறார்:—

मुक्तातपत्रं शशिकोटिशुभ्रं शुभप्रदं काञ्चनदण्डयुक्तम् ।
माणिक्यसंस्थापितहेमकुम्भं सुरेश मृत्युञ्जय तेऽर्पयामि ॥

முக்தாதபத்ரம் ஶஶி கோடி ஶுப்ரம்
ஶுப ப்ரதம் காஞ்சந தண்ட யுகதம் ।
மாணிக்ய ஸமஸ்தாபித ஹேம கும்பம்
ஸுரேஶ ம்ருத்யுஞ்ஜய தேऽர்பயாமி ॥

**शशिकोटिशुभ्रं** - கோடிக்கணககான சந்திராகள்போல், வெளுப்பானதாயும், **शुभप्रदं**-நன்மை பயக்கின்றதாயும், **काञ्चनदण्डयुक्तं**-தங்கததாலான அடிக்கம்புடன் கூடியதாயும் **माणिक्यसंस्थापित**-ரத்னங்கள பதித்த, **हेमकुम्भं**-பொற் கலசததை உடையதாயும் விளங்குகிற, **मुक्तातपत्रं**-முத்துக் குடையை, **मृत्युञ्जय**-யமனை வென்றவனே, **सुरेश**-தேவர்களை யெல்லாம் காத்தருள்கின்றவனே, **ते**-உனக்கு, **अर्पयामि**-அளிக்கின்றேன்.

காலனைக கொன்றவனே! தேவாகளைக்காத்தருள் கின்றவனே! நான் உனககு ஓர் முத்துக்குடையையளிக் கிறேன் அது ஆயிரககணக்கான சநதிராகள்போல மிகவும் வெளுப்பானது. தங்கத்தடியுடன் கூடியது. ரத்னங்கள பதித்த பொறகுமிழி உடையது. எல்லா நன்மை களையும் அளிகக வலலது. நீ அதனைப்பெற்று மகிழ்நதிடு வாயாக். (19)

(அ) கண்ணாடியில பார்ககும்படி வேண்டுகிறார்:—

मणिमुकुरे निष्पटले त्रिजगद्गाढान्धकारसप्ताश्वे ।
कंदर्पकोटिसदृशं मृत्युञ्जय पश्य वदनमात्मीयम् ॥ २० ॥

மணி முகுரே நிஷ்படலே த்ரிஜகத் காடாந்தகாரஸப்தாஶ்வே।
கந்தர்ப்ப கோடி ஸத்ருஶம் ம்ருத்யுஞ்ஜய பஶ்ய
வதநமாத்மீயம் ॥

मृत्युञ्जय-யமனை வென்றவனே, निष्पटले-தூசுபடியாத தும், त्रिजगद्गाढान्धकार-மூவுலகிலும் வியாபித்துள்ள ஆழ்ந்த இருட்டிற்கு, सप्ताश्वे-சூரியனாக விளங்குகின்றதுமான, मणिमुकुरे-இரத்தினக கண்ணாடியில, कन्दर्पकोटिसदृशं-கோடிக் கணக்கான மன்மதாகளுடையதுபோன்ற, आत्मीयं-உன் னுடைய, वदनं-முகத்தை, पश्य-பார்.

காலனை வென்றவனே! நான் உன் முன்னிலையில் இரத்தினக் கண்ணாடியை வைக்கிறேன். அது மாசு படியாதது சூரியன் எவ்வாறு மூவுலகிலும் நிறைந்துள்ள இருளைப்போக்குகிறானோ, அதுபோலவே இக்கண்ணாடி எங்கும் வியாபித்துள்ள இருட்டை நீக்கி ஒளியைத்தர வல்லது. இக்கண்ணாடியில கோடிக்கணக்கான மன்மதா களின் முகம போல அழகான உன்னுடைய முகத்தைப் பார்த்துககொள. (20)

(அ) ஸுகந்த தூபத்தால உபசரிக்கிறார்:—

कर्पूरचूर्णं कपिलाज्यपूतं दास्यामि कालेयसमन्वितञ्च ।
समुद्भवं पावनगन्धधूपितं मृत्युञ्जयाङ्गं परिकल्पयामि ॥

கற்பூர சூர்ணம் கபிலாஜ்ய பூதம்
தாஸ்யாமி காலேய ஸமந்விதஞ்ச।
ஸமுத்பவம் பாவந கந்த தூபிதம்
ம்ருத்யுஞ்ஜயாங்கம் பரிகல்பயாமி ॥

मृत्युञ्जय-யமனை வென்றவனே, कपिलाज्यपूतं-'கபிலா' என்ற பசுவின் நெய்யால பரிசுத்தமானதும், कालेयसमन्वितं च-சந்தணத்துடன் கூடியதும், समुद्भवं-சிறப்புற்றதுமான,

**कर्पूरचूर्ण**-கற்பூரப் பொடியை, **दास्यामि**-கொடுக்கிறேன் (இதனுல்), **अङ्गं**-அங்கத்தை, **पावनगन्धधूपितं**-புனித வாஸனையால நறுமணமுள்ளதாக, **परिकल्पयामि**-செய்கிறேன்.

யமனை வென்றவனே! நான் உனக்கு உகந்த தூபத்தை அளிக்கிறேன் அது சிறநத பசுவின் நெய்யால் பரிசுத்தம செய்யப்பட்டுளளது. சநதணத்துாளுடன கூடியது நன்ருகச செய்யப்பட்டுள்ளது. சிறந்த வாசனை உள்ளது. கற்பூரபபொடியுடன் கூடியது. அதை ஏற்றுக் கொள்வாயாக. (21)

(அ) தீபம் :—

**वर्तित्रयोपेतमखण्डदीप्त्या तमो हरं बाह्यमथान्तरं च ।**
**साज्यं समस्तामरवर्गहृद्यं सुरेश मृत्युञ्जय वंशदीपम् ॥ २२ ॥**

வாத்தித்ரயோபேதமகணடதீபதயா
தமோ ஹரம் பாஹயமதாநதரம் ச ।
ஸாஜ்யம் ஸமஸ்தாமரவர்ககஹ்ருத்யம்
ஸுரேஶ ம்ருத்யுஞ்ஜய வம்ஶதீபம் ॥

**सुरेश**-தேவாதிதேவனே, **मृत्युञ्जय**-யமனை வென்றவனே, **वर्तित्रयोपेतं**-மூன்று திரிகளுடன்கூடியதும், **अखण्डदीप्त्या**-பூர்ணமான ஒளியால், **बाह्यं**-வெளியில உள்ளதும், **अथ आन्तरं च**-பின்னா உள்ளேயுள்ளதுமான, **तमः**-இருளை, **हरं**-அகற்றுகின்றதும், **साज्यं**-நெய்யுடன் கூடியதும், **समस्त**-எல்லா, **अमरवर्ग**-தேவர்களுடைய கூட்டத்திற்கு, **हृद्यं**-மனோஹரமாயும் உள்ள, **वंशदीपं**-மூங்கில விளக்கை, **ते**-உனக்கு, **परिकल्पयामि**-ஏற்றிவைக்கிறேன்.

யமனை வென்றவனே! அமரர்களுக்கெல்லாம் தலைவனுக விளங்குகின்றவனே! நான் உனக்குச்சிறந்த தீபத்தை ஏற்றிவைக்கிறேன். அது மூன்று திரிகளை உடையது. நல்ல நெய்யுடன் கூடியது. அணையாமல் எப்பொழுதும் எரியக்கூடியது. வெளியில நிறைந்துள்ள இருட்டையும் மனதிற்குள் நிலவும் அறியாமையென்ற

இருளையும் நீக்கும் ஆற்றல் பெற்றது. தேவர்களின் மனதைக் கவரக்கூடியது. இவ்விளககைப் பெற்று மகிழ்ந்திடுவாயாக. (22)

(அ) நைவேத்யம் :—

राजान्नं मधुरान्वितं च मृदुलं माणिक्यपात्रे स्थितं
हिङ्गूजीरकसन्मरीचिमिलितैः शाकैरनेकैः शुभैः ।
साकं सम्यगपूपसूपसहितं सद्योघृतेनाप्लुतं
श्रीमृत्युञ्जय पार्वतीप्रिय विभो सापोशनं भुज्यताम् ॥ २३ ॥

ராஜாந்நம் மதுராந்விதம் ச ம்ருதுளம்
மாணிகய பாதரே ஸ்திதம்
ஹிங்கூ ஜீரக ஸந்மரீசி மிலிதை ஶாகைரநேகை: ஶுபை: ।
ஸாகம் ஸம்யகபூப ஸூப ஸஹிதம் ஸத்யோக்ருதேநாப்லுதம்
ஸ்ரீம்ருத்யுஞ்ஜய பார்வதீ பரிய விபோ ஸாபோஶநம்
புஜ்யதாம் ॥

**श्रीमृत्युञ्जय**-யமனை வென்றவனே, **पार्वतीप्रिय**-மலைமகளுக்கு பிரியமானவனே, **विभो**-எங்கும் நிறைநதவனே, **माणिक्यपात्रे**-இரத்தினப் பாத்திரததில, **स्थितं**-வைககபபடடுள்ளதும், **मधुरान्वितं**-சாக்கரையுடன் கூடியதும், **मृदुलं**-மென்மை யானதும், **अपूपसूपसहितं**-அப்பம, பருப்பு இவைகளுடன் கூடியதும், **सद्योघृतेन**-அபபொழுதே வெண்ணையெடுத்துக் காய்சசிய நெயயால, **आप्लुतं**-நனைககப்பட்டதுமான, **राजान्नं**-சிறந்த உணவு, **हिङ्गूजीरकसन्मरीचिमिलितैः**-பெருங்காயம், சீரகம், நலல மிளகு, இவைகளுடன்கூடிய, **अनेकैः**-பல, **शुभैः** நலல, **शाकैः साकं**-காய்கறிகளுடன்கூட, **सापोशनं**-முதலில் ஆபோசனத்துடன், **सम्यक्**-நனகு, **भुज्यताम्**-சாப்பிடப் படட்டும்.

யமனை வென்றவனே! பார்வதிக்கு உகநதவனே! எங்கும் நிறைந்து விளங்குகின்றவனே! நான் உனக்குச சிறந்த உணவை யளிக்கின்றேன். அது இனிமையானது. மிகவும் மிருதுவானது. இரத்தினப் பாத்திரத்தில வைக்கப்

பட்டுள்ளது. பெருங்காயம், மிளகு, சீரகம் முதலிய வற்றுடன் கூடிய பல நல்ல காய்கறிகளுடன் கூடியது. அப்பம், பருப்பு முதலியவைகளாலும், நெய்யாலும் நன்கு பரிஷ்காரம் செய்யப்பட்டுள்ளது இதை நன்கு புஜிப்பாயாக.

**कूश्माण्डवार्ताकपटोलिकानां फलानि रम्याणि च कारवल्ल्याः ।**
**सुपाकयुक्तानिससौरभाणि श्रीकण्ठ मृत्युञ्जय भक्षयेश ॥ २४ ॥**

கூஶ்மாண்ட வார்த்தாக படோலிகாநாம்
பலாநி ரம்யாணி ச காரவல்லயா: ।
ஸுபாக யுக்தாநி ஸஸௌரபாணி
ஸ்ரீகண்ட ம்ருத்யுஞ்ஜய பக்ஷயேஶ ॥

**मृत्युञ्जय**-யமனை வென்றவனே, **श्रीकण्ठ**-விஷத்தைக் கழுத்தில வைத்துக்கொண்ட, **ईश**-ஈசனே, **रम्याणि**-மனோஹர மானதும், **सुपाकयुक्तानि**-நன்கு பாகம் செய்ததும், **ससौरभाणि**-வாஸனையுடன் கூடியதுமான, **कूश्माण्डवार्ताकपटोलिकानां**-பூஷிணி, கத்திரி, புடல இவைகளுடையவும, **कारवल्ल्याश्च**-பாகலினுடையவும், **फलानि**-காய்களை, **भक्षय**-சாப்பிடும்.

யமனை வென்றவனே, ஸ்ரீகண்டா, ஈசனே! பூஷிணிக் காய், கத்திரிககாய, புட லங்காய், பாகறகாய் இவைகளை நன்கு பாகம செய்து மனோஹரமாகவும், வாஸனையுள்ள தாகவும் ஆக்கி அளிக்கிறேன். சாப்பிடவேணும். (24)

**शीतलं मधुरं स्वच्छं पावनं वासितं लघु ।**
**मध्ये स्वीकुरु पानीयं शिव मृत्युञ्जय प्रभो ॥ २५ ॥**

ஶீதளம் மதுரம் ஸ்வசசம் பாவநம் வாஸிதம் லகு ।
மத்யே ஸ்வீகுரு பாநீயம் ஶிவ ம்ருத்யுஞ்ஜய ப்ரபோ ॥

**शिव**-சிவபெருமானே, **मृत्युञ्जय**-யமனை வென்றவனே, **प्रभो**-பிரபுவே. **मध्ये**-நடுவில, **शीतलं**-குளிர்ந்ததாயும், **मधुरं**-இனிப்பாயும், **स्वच्छं**-தெளிந்ததாயும், **पावनं**-பரிசுத்தமாயும், **वासितं**-வாசனையுள்ளதாகச் செய்யப்பட்டதாயும், **लघु**-இலே சாயும் உள்ள, **पानीयं**-நீரை, **स्वीकुरु**-ஏற்றுக்கொள்ளும்.

சிவபெருமானே! யமனை வென்ற பிரபுவே! சாப்பிடும் பொழுது நடுவில் தாகத்தைத் தணிப்பதற்காக நான் உமக்குக் குளிர்ச்சியாயும், இனிப்பாயும், தெளிவானதாயும், புனிதமானதும், நறுமணமுள்ளதாயும், இலேசானதாயு முள்ள தீர்த்தத்தைத் தருகின்றேன் அதை நீர் அருந்தி உமது தாகத்தைத் தவிர்த்துக்கொள்ளும். (25)

शर्करामिलितं स्निग्धं दुग्धान्नं गोघृतान्वितम् ।
कदलीफलसंमिश्रं भुज्यतां मृत्युसंहर ॥ २६ ॥

ஶர்கரா மிளிதம் ஸ்நிக்தம் துக்தான்னம் கோக்ருதான்விதம் ।
கதலீபல ஸம்மிச்ரம புஜ்யதாம் ம்ருத்யு ஸம்ஹர ॥

मृत्युसंहर-காலனை வதைத்தவனே! शर्करामिलितं-சர்க்கரை கலந்ததும, स्निग्धं-பசையுள்ளதும், गोघृतान्वितं-பசுவின் நெய்யுடன் கூடியதும், कदलीफलसंमिश्रं-வாழைப் பழத்துடன கலந்ததுமான, दुग्धान्नं-பாலுஞ்சாதம, भुज्यताम्- சாப்பிடப்படட்டும்.

யமனை வதைத்த பரமேசுவரனே! நான் உமக்குப் பாலுண்டியளிக்கிறேன். அது சாக்கரை கலந்தது. பசுவின் நெய்ப்பசையுடன கூடியது. வாழைப்பழம் சேர்ந்தது. அதை நீ புஜிப்பாயாக. (26)

केवलमतिमाधुर्यं दुग्धैः स्निग्धैश्च शर्करामिलितैः ।
एलामरीचिमिलितं मृत्युञ्जय भुङ्क्ष्व परमान्नम् ॥ २७ ॥

கேவலமதிமாதுர்யம் துக்தை ஸ்நிக்தைஶ்ச ஶர்கரா மிளிதை: ।
ஏலா மரீசி மிலிதம் ம்ருத்யுஞ்ஜய புங்க்ஷ்வ பரமாந்நம் ॥

मृत्युञ्जय-யமனை வென்றவனே! स्निग्धैः-பசையுள்ளவை களாயும், शर्करामिलितैः च-சாக்கரையுடன் கூடியவைகளாயு முள்ள, दुग्धैः-பாலால, केवलं अतिमाधुर्यं-மிகுந்த இனிப்பாகிய

ஒரே சுவையுள்ளதாயும், **एलामरीचिमिलितं**-ஏலம், மிளகு இவைகளுடன் கூடியதாயும் விளங்குகின்ற, **परमान्नं**-பாயஸத்தை, **भुङ्क्ष्व**-சாப்பிடுவாயாக.

யமனை வென்றவனே! நான் உனக்குச் சிறந்த பாயஸத்தை அளிக்கின்றேன். அது நல்ல பசையுள்ள பாலாலும் சாக்கரையாலும் சமைக்கப்பட்டுள்ளது. ஆதலால் அது மிகவும் தித்திப்பானது மேலும் அதில் ஏலம், மிளகு முதலியவைகளும் சேர்ந்துள்ளதால் அது நறுமணத்துடன் கூடியது. நீ அதை புஜிப்பாயாக. (27)

रम्भाचूतकपित्थकण्टकफलैर्द्राक्षारसस्वादुम-
त्खर्जूरैर्मधुरेक्षुखण्डशकलैः सन्नारिकेलाम्बुभिः ।
कर्पूरेण सुवासितैर्गुडजलैर्माधुर्ययुक्तैर्विभो
श्रीमृत्युञ्जय पूरय त्रिभुवनाधारं विशालोदरम् ॥ २८ ॥

ரம்பா சூத கபித்த கண்டக பலைர் த்ராக்ஷாரஸ ஸ்வாதுமத்
கர்ஜூரைர் மதுரேக்ஷு கண்ட ஶகலை: ஸந்நாரிகேலாம்புபி: ।
கர்பூரேண ஸுவாஸிதைர் குடஜலைர் மாதுர்ய
யுக்தைர் விபோ
ஸ்ரீ ம்ருத்யுஞ்ஜய பூரய த்ரிபுவநாதாரம் விஶாலோதரம் ॥

**श्रीमृत्युञ्जय**-யமனை வென்றவனே, **विभो**-எங்கும் பரவி நிற்கும் சிவபெருமானே, **रम्भा**-வாழை, **चूत**-மா, **कपित्थ**-விளா, **कण्टक**-பலா இவைகளுடைய, **फलैः**-பழங்களாலும், **द्राक्षारस**-திராக்ஷா ரஸத்தாலும், **स्वादुमत्**-சுவையுள்ள, **खर्जूरैः**-பேரீச்சம் பழங்களாலும், **मधुर**-இனிப்பான, **इक्षुखण्ड**-கரும்புத் துண்டுகளின், **शकलैः**-பாகங்களாலும், **सन्नारिकेलाम्बुभिः**-நல்ல இளநீர்களாலும், **कर्पूरेण**-பச்சைக் கற்பூரத்தால், **सुवासितैः**-நறுமணம் கமழும்படி செய்யப்பட்டதாயும், **माधुर्ययुक्तैः**-இனிப்புடன் கூடியதுமான, **गुडजलैः**-பானகங்களாலும், **त्रिभुवनाधारं**-மூவுலகிற்கும் உறைவிடமான, **विशालोदरं**-விரிந்த வயிற்றை, **पूरय**-நிரப்பிக்கொள்வாயாக.

யமனை வென்றவனே! எங்கும் பரவி நிறகும் பரம் பொருளே! நான் உமக்குப் பலவிதமான பழவகைகளையும் பானகங்களையும் வழங்குகிறேன். அவறறை நீ அருநதி மூவுலகங்களுககும உறைவிடமாய் விளஙகும் உன விசால மான வயிற்றை நிரப்பிக கொளவாயாக. பழங்களில் சிறநது விளஙகுவன வாழை, மா, விளா, பலா, திராக்ஷை, பேரீசசை முதலியன அவறறை எல்லாம் உனக்கே அரப்பணம் செயகின்றேன். மேலும் நலல தித்திப்பான கரும்புசசாற்றையும இளநீரையும, பானகத்தையும அருநது வதறகாக அளிக்கினறேன். அப்பானகம் கற்பூரத்தின் சேர்க்கையால நறுமணம் பெற்று விளங்குகின்றது. இவற்றால உனது பெரும வயிறு நிரமபட்டும் மூவுலகங களிலும வசிககும எலலா பிராணிகளும உன் உதரத்தில இருப்பதால நீ சாப்பிட்டு திருபதியடைநதுவிட்டால எலலா பிராணிகளுககும திருபதி ஏறபட்டுவிடும. (28)

**मनोज्ञरम्भानवखण्डखण्डितान्रुचिप्रदान्सर्षपजीरकांश्च ।**
**ससौरभान्सैन्धवसेवितांश्च गृहाण मृत्युञ्जय लोकवन्द्य ॥ २९ ॥**

மனோக்ஞ ரம்பா நவ கண்ட கண்டிதான்
ருசிப்ரதான் ஸர்ஷப ஜீரகாம்ஸ்ச ।
ஸஸௌரபான் ஸைந்தவ ஸேவிதாம்ஸ்ச
க்ருஹாண ம்ருத்யுஞ்ஜய லோக வந்த்ய ॥

**मृत्युञ्जय**–யமனை வென்றவனே, **लोकवन्द्य**–எலலா உலகத்தினராலும் வணங்கத்தகுந்தவனே, **रुचिप्रदान्**– நலல சுவை தருகின்றவைகளும், **ससौरभान्**– நலல வாசனையுடன் கூடியவைகளும, **सैन्धवसेवितान् च**–உப்புடன் சேர்ந்தவை களும், **सर्षपजीरकांश्च**–கடுகு, சீரகம், கலநததுமான, **मनोज्ञ**– அழகிய, **रम्भानवखण्डखण्डितान्** – புதிய வாழைத்தண்டின் சிறு சிறு துண்டுகளை, **गृहाण**–ஏறறுககொள்வாயாக.

யமனை வென்றவனே! எலலா உலகங்களாலும் போறறப்படுகின்ற பரமேச்வரனே! நான் உமககாக புதிய வாழைத்தண்டை சிறு சிறு துண்டுகளாக நறுக்கி உப்பு

சேர்த்து கடுகு ஜீரகம் தாளிசம் செய்து நல்ல சுவையும வாஸனையும் உள்ளதாக ஆக்கித் தருகிறேன் ஏற்றுக் கொள்வாயாக. (29)

(அ) மேலும் பலவித உணவு வகைகளைத்தருகிருர்:—

हिङ्गूजीरकसहितं विमलामलकं कपित्थमतिमधुरम् ।
बिसखण्डाँल्लवणयुतान्मृत्युञ्जय तेऽर्पयामि जगदीश ॥ ३० ॥

ஹிங்கூ ஜீரக ஸஹிதம்
விமலாமலகம கபித்தமதிமதுரம் ।
பிஸகண்டான் லவணயுதான்
ம்ருதயுஞ்ஜய தே஽ர்பயாமி ஜகதீஶ ॥

मृत्युञ्जय-யமனை வென்றவனே, जगदीश-உலகையாள் பவனே, ते-உமக்கு, हिङ्गूजीरकसहितं-பெருங்காயம், சீரகம் இவைகளுடன் கூடிய, विमलामलकं-பரிசுத்தமான நெல்லிக் கனியையும, अतिमधुरं-மிகவும இனிப்பான, कपित्थं-விளாம் பழத்தையும், लवणयुतान्- உப்புடன் கூடிய, बिसखण्डान्-தாமரைத் துண்டங்களையும, अर्पयामि-அளிக்கின்றேன்.

யமனை வென்றவனே! எல்லா உலகங்களையும் ஆளு கின்ற பரமேசவரனே! நான் உமக்குப பெருங்காயம ஜீரகங் களுடன் கூடிய நல்ல நெல்லிக்கனியையும மிகவும் இனிய விளாம்பழத்தையும, உப்புக்கலந்த தாமரைத் தண்டுகளின் துண்டுகளையும் அளிக்கின்றேன். (30)

एलाशुण्ठीसहितं दध्यन्नं चारुहेमपात्रस्थम् ।
अमृतप्रतिनिधिमाढ्यं मृत्युञ्जय भुज्यतां त्रिलोकेश ॥ ३१ ॥

ஏலா ஶுண்டீ ஸஹிதம் தத்யன்னம சாரு ஹேம பாத்ரஸ்தம் ।
அம்ருத ப்ரதிநிதிமாட்யம மருதயுஞ்ஜய புஜ்யதாம்
த்ரிலோகேஶ ॥

मृत्युञ्जय யமனை வென்றவனே! त्रिलोकेश-மூவுலகத் திற்கும அதிபதியே, एलाशुण्ठीसहितं-ஏலம், சுக்கு இவை களுடன் கூடியதும், आढ्यं-சிறந்ததும், अमृतप्रतिनिधिं-

அமுதத்திற்கு ஒப்பானதும், **चारुहेमपात्रस्थं**-அழகிய தங்கப் பாத்திரத்தில வைக்கப்பட்டுள்ளதுமான, **दध्यन्नं**-தயிர்சாதம் **भुज्यताम्** – புஜிக்கப்படட்டும்.

யமனை வென்றவனே! மூன்று உலகங்களையும் ஆளுகின்றவனே! நான் உனக்கு சுக்கு ஏலம் முதலியவைகளுடன் கூடியதும அமுதத்துக்கொப்பானதுமான நல்ல தயிர் சாதத்தைத தங்கபபாததிரத்தில வைததிருக்கிறேன். அதை நீ புஜிபபாயாக. (31)

**जम्बीरनीराञ्चितशृङ्गबेरं मनोहरानम्लशलाटुखण्डान् ।**

**मृदूपदंशान् सहसोपभुङ्क्ष्व मृत्युञ्जय श्रीकरुणासमुद्र ॥ ३२ ॥**

ஜம்பீர நீராஞ்சித ஶ்ருங்கபேரம்
மனோஹரானம்ல ஶலாடு கண்டாந் ।
ம்ருதூபதம்ஶான் ஸஹஸோபபுங்க்ஷ்வ
ம்ருதயுஞ்ஜய ஸ்ரீகருணாஸமுதர ॥

**मृत्युञ्जय**-யமனை வென்றவனே, **श्रीकरुणासमुद्र**-கருணைக கடலே, **जम्बीरनीराञ्चित**-எலுமிச்சை ரஸத்தால சுவையாகச செய்யப்பட்ட, **शृङ्गबेरं**-இஞ்சியையும், **मनोहरान्**-மனதைக் கவரக்கூடியதாயும், **अम्ल**-புளிப்புச சுவையுள்ள, **शलाटु-खण्डान्** – காய் கிழங்குகளுடன் கூடியதுமான, **मृदूपदंशान्** – மெதுவான ஊறுகாய்களையும், **सहसा**-உடனேயே, **उपभुङ्क्ष्व**-சாப்பிடுவாயாக.

யமனை வென்றவனே! கருணைக்கடலே! நான் உனக்கு எலுமிச்ச ரஸத்துடன் கூடிய இஞ்சியையும் மனதிற்குப் பிரியமான காய் கிழங்குகளின் ஊறுகாய்களையும் தருகின்றேன். அவற்றை நீ உடனேயே புஜித்திடுவாயாக. (32)

**नागरगमठयुक्तं सुललितजम्बीरनीरसंपूर्णम् ।**

**मथितं सैन्धवसहितं पिब हर मृत्युंजय क्रतुध्वंसिन् ॥ ३३ ॥**

நாகர ராமடயுக்தம் ஸுலலித ஜம்பீர நீர ஸம்பூர்ணம் ।
மதிதம் ஸைந்தவ ஸஹிதம் பிப ஹர ம்ருத்யுஞ்ஜய
கரது த்வம்ஸின் ॥

**मृत्युञ्जय**-யமனை வென்றவனே, **क्रतुध्वंसिन्**- யாகத்தை நாசம் செய்தவனே ! **हर**-பரமசிவனே ! **नागररामठयुक्तं**-சுக்கு, பெருங்காயம் இவைகளுடன் கூடியதும், **सुललित**-நலல, **जम्बीरनीरसंपूर्णं**-எலுமிசச ரஸம் நிறைந்ததும், **सैन्धवसहितं**-உப்புடன் கூடியதுமான, **मथितं**-மோரை, **पिब**-குடிப்பாயாக.

யமனை வென்றவனே ! தக்ஷனுடைய யாகத்தை அழித்தவனே ! பரமேசவரனே ! நான் உனக்கு எலுமிச்சை ரஸம் சேர்த்துக்கரைத்த மோரைக் கொடுக்கின்றேன். அது நன்கு கடையப்பட்டுள்ளது. சுக்கு பெருங்காயம் இவைகளுடன் கூடியது. உப்பிட்டுச சுவையாகச் செய்யப் பட்டுள்ளது. அதை நீ அருநதுவாயாக (33)

(அ) உத்தராபோசனம்:—

**मन्दारहेमाम्बुजगन्धयुक्तैर्मन्दाकिनीनिर्मलपुण्यतोयैः ।**
**गृहाण मृत्युञ्जय पूर्णकाम श्रीमत्परापोशनमभ्रकेश ॥ ३४ ॥**

மந்தார ஹேமாமபுஜ கநதயுக்தைர்
மந்தாகினீ நிர்மல புண்ய தோயை: ।
க்ருஹாண மருத்யுஞ்ஜய பூர்ணகாம
ஸ்ரீமத் பராபோஶனமபரகேஶ ॥

**मृत्युंजय**-யமனை வென்றவனே **पूर्णकाम**-நிறைவேறிய விருப்பங்களையுடையவனே **अभ्रकेश**-ஆகாயம்போல் எங்கும் விரிந்த கேசங்களையுடையவனே (ஆகாசத்தையே கேசமாகக் கொண்டவனே) **मन्दारहेमाम्बुज** — மந்தாரம் பொறருமரை முதலிய மலர்களின் **गन्धयुक्तैः**-வாசனையுடன் கூடியவைகளான **मन्दाकिनी** – கஙகையினுடைய **निर्मल**-பரிசுத்தமாயும் **पुण्य**-புண்ணியமாயும் உள்ள **तोयैः**-ஜலங் களால **श्रीमत्परापोशनं**-சிறந்த உத்தராபோசனத்தை **गृहाण**-ஏற்றுக்கொள்.

யமனை வென்றவனே! நிறைவேறிய ஸமஸ்த காமங்களையும் உடையவனே! விரிந்த செஞ்சடைகளையுடைய பரமேச்வரனே! ஆகாசத்தையே கேசமாகக்கொண்டவனே (உலகம் முழுவதையும் சரீரமாகக்கொண்ட பகவானுடைய விராட் ஸ்வரூபத்தில ஆகாசமே கேசமாக அமைந்துள்ளது) சாப்பிட்ட பின்னா உமக்கு உத்தராபோசனததிற்காகச் சிறந்த புனிதமான கங்காஜலத்தைத தருகின்றேன். அது மந்தாரம், பொற்றாமரை முதலிய மலர்களின் இனிய வாசனையுடன் கூடியது அதை நீ அருந்துவாயாக (34)

(அ) ஹஸ்தபாதப்ரக்ஷாலனம (கைகால அலம்புவது)

गगनधुनीविमलजलैर्मृत्युंजय पद्मरागपात्रगतैः ।
मृगमदचन्दनपूर्णैः प्रक्षालय चारु हस्तपदयुग्मम् ।। ३५ ।।

ககநதுநீ விமல ஜலைர்
மருத்யுஞ்ஜய பத்மராக பாத்ர கதை: ।
ம்ருகமத சநதன பூர்ணை
ப்ரக்ஷாலய சாரு ஹஸ்த பத யுகமம் ||

**मृत्युंजय**-யமனை வென்றவனே **पद्मरागपात्रगतैः**-பத்மராக ரத்னத்தால இழைக்கப்பட்ட பாத்திரத்திலுளள **मृगमद-चन्दनपूर्णैः**-கஸ்தூரி, சநதனம் இவைகள நிறைந்த **गगनधुनी**-கங்கையின் **विमलजलैः**-கலககமறற தண்ணீர்களால் **चारु**-அழகிய **हस्तपदयुग्मम्**-இரு கைகளையும் இரு கால்களையும் **प्रक्षालय**-அலம்பிக்கொள்ளவேணும்.

யமனை வென்றவனே! சாப்பிட்ட பின்னர் உன்னுடைய கை காலகளைக் கழுவிக் கொளவதறகாக நான் பத்மராக ரத்தினப் பாத்திரத்தில கலங்கமறற கஙகாஜலத்தைக் கொண்டுவந்து வைத்திருககிறேன். அதில கஸ்தூரியும் சந்தனமும் சேர்ந்து மிகுந்த வாஸனையுடன் இருக்கிறது. அவைகளால் உன்னுடைய கை காலகளைக் கழுவிக் கொள். (35)

(அ) சாப்பிட்டபின் ஆசமனம் .—

पुन्नागमल्लिकाकुन्दवासितैर्जाह्नवीजलैः ।
मृत्युंजय महादेव पुनराचमनं कुरु ॥ ३६ ॥

புந்நாக மல்லிகா குந்த வாஸிதைர் ஜாஹ்நவீ ஜலை: ।
ம்ருத்யுஞ்ஜய மஹாதேவ புநராசமநம் குரு ॥

**मृत्युंजय**-யமனை வென்றவனே **महादेव**-மஹாதேவனே **पुन्नागमल्लिकाकुन्द**-புந்நாகம், மல்லிகை, குந்தம் இந்த மலர்களால் **वासितैः**-நறுமணமுள்ளதாகச் செய்யப்பட்ட **जाह्नवीजलैः**-கங்கா ஜலங்களால் **पुनः**-மறுபடியும் **आचमनं**-ஆசமனத்தை **कुरु**-செய்.

யமனை வென்றவனே! தேவாதிதேவனே! சாப்பிட்ட பின்னர் ஆசமனத்திற்காக நான் உமக்கு புந்நாகம், மல்லிகை, குந்தம் முதலிய நறுமலர்களின் மணத்தால் சிறந்த வாசனையுடன் கூடியதாகச் செய்யப்பட்ட கங்கா ஜலத்தைக் கொடுக்கின்றேன். அதனால் நீ ஆசமனம் செய்வாயாக. (36)

(அ) தாம்பூலம் :—

मौक्तिकचूर्णसमेतैर्मृगमदघनसारवासितैः पूगैः ।
पर्णैः स्वर्णसमानैर्मृत्युंजय तेऽर्पयामि ताम्बूलम् ॥ ३७ ॥

மௌக்திக சூர்ண ஸமேதைர்
ம்ருகமத கநஸார வாஸிதை: பூகை: ।
பர்ணை: ஸ்வர்ண ஸமாநைர்
ம்ருத்யுஞ்ஜய தேऽர்பயாமி தாம்பூலம் ॥

**मृत्युंजय**-யமனை வென்றவனே! **ते**-உனக்கு **मौक्तिकचूर्णसमेतैः**-நல் முத்துப்பொடிகளுடன் கூடிய **मृगमद**-கஸ்தூரி **घनसार**-பச்சைக் கற்பூரம் இவைகளால் **वासितैः**-வாசனையுள்ளதாகச் செய்யப்பட்ட **पूगैः**-பாக்குகளாலும் **स्वर्णसमानैः**-தங்கத்திற்கு ஒப்பான **पर्णैः**-வெற்றிலைகளாலும் **ताम्बूलं**-தாம்பூலத்தை **अर्पयामि**-கொடுக்கிறேன்.

யமனை வென்றவனே! சாப்பிட்டபின்னர் நான் உனக்குத தாம்பூலம தருகின்றேன். இதில நல்முத்துப் பொடியால செய்யப்பட்ட சுண்ணும்பும், பசசைக்கறபூரம், கஸதூரி முதலியவற்ருல நறுமணம உள்ளதாகச் செயயப் பட்ட பாககுப்பொடியும, பொனனிறமுளள வெறறிலைகளும் உள்ளன இதை நீ ஏறறுக்கொள்வாயாக. (37)

(அ) நீராஜனம :—

**नीराजनं निर्मलदीप्तिमद्भिर्दीपांकुरैरुज्ज्वलमुच्छ्रितैश्च ।**
**घण्टानिनादेन समर्पयामि मृत्युंजयाय त्रिपुरान्तकाय ॥ ३८॥**

நீராஜநம் நிாமல தீப்திமத்பிர
தீபாங்குரைருஜ்ஜ்வலமுச்சரிதைாச |
கண்டா நிநாதேந ஸமாபபயாமி
மருதயுஞ்ஜயாய தரிபுராநதகாய ||

**मृत्युंजयाय**-யமனை வென்றவனும் **त्रिपुरान्तकाय**-த்ரிபுர ஸம்ஹாரம் செய்தவனுமான பரமேசவரனுக்கு **निर्मल**-கலங் கமில்லாத **दीप्तिमद्भिः**-ஒளிகளையுடையவைகளாயும் **उच्छ्रितैः-च**-உயர்ந்தவைகளாயும் உள்ள **दीपांकुरैः**-விளக்கின் ஜ்வாலை களால **उज्ज्वलं**-நன்கு பிரகாசிக்கின்ற **नीराजनं**-கற்பூர ஹாரத்தியை **घण्टानिनादेन**-கண்டா நாதத்துடன் (மணியோ சையுடன்) **समर्पयामि**-அளிக்கிறேன்.

பரமேசவரன் யமனை வென்றவன். த்ரிபுரங்களை அழித்தவன். இவ்வாறு விளங்கும் பரமேசவரனுககு உயரக் கிளம்பி யெழும மாசறற தீபஜ்வாலைகளால் நன்கு பிரகாசிக்கும்படியாக மணியடிததுககொணடு நீராஜனம் செய்கிறேன். (38)

(அ) பூஜையின் முடிவில மறுபடியும் அர்க்யம்:—

**विरिञ्चिमुख्यामरवृन्दवन्दिते सरोजमत्स्याङ्कितचक्रचिह्निते ।**
**ददामि मृत्युंजय पादपङ्कजे फणीन्द्रभूषे पुनरर्घ्यमीश्वर ॥ ३९ ॥**

விரிஞ்சி முக்யாமர ப்ருந்த வந்திதே
ஸரோஜ மத்ஸயாங்கித சகர சிந்ஹிதே ।
ததாமி ம்ருத்யுஞ்ஜய பாத பங்கஜே
பணீந்த்ர பூஷே புனராக்யமீஸ்வர ॥

**मृत्युंजय**-யமனை வென்றவனே! **ईश्वर**-பரமேசவரனே! **विरिञ्चिमुख्य**-பிரஹ்மா முதலிய **अमरबृन्द**-தேவர்களுடைய கூட்டங்களால **वन्दिते**-வணங்கப்பட்டதும் **सरोज**-பத்ம (தாமரை) ரேகை **मत्स्य**-மதஸய (மீன்) ரேகை இவைகளால **अङ्कित**-அடையாளமிடப்பட்டதும் **चक्रचिह्निते**-சக்ர ரேகையால அடையாளமிடப்பட்டதும் **फणीन्द्रभूषे**-சிறந்த பாமபுகளை அணியாகக் கொண்டதுமான **पादपङ्कजे**-உன்னுடைய பாத பத்மததில **पुनः**-மறுபடியும் **अर्घ्य**-அர்க்யத்தை **ददामि**-கொடுக்கிறேன்

யமனை வென்றவனே! ஏ பரமேச்வரனே! பூஜையின் முடிவில உன்னுடைய பாதபத்மத்தில மறுபடியும் நான் அர்க்யமளிக்கிறேன். உன்னுடைய திருவடிகள் பிரஹ்மா முதலிய தேவகணங்களால வணங்கப்படுகின்றன. அவைகள் தாமரை, மத்ஸ்யம், சக்ரம முதலிய சிறந்த ரேகைகளையுடையன. இவ்வாறு சிறநத ஸாமுதரிகா லக்ஷணங்களுடன் விளங்குகின்றதும் அரவஙகளையே அணிகலமாகப் பெற்றதாயும் உளள உமது திருவடிகளில ஆரகயம் தருகின்றேன். (39)

(அ) புஷ்பாஞ்ஜலி ஸமர்ப்பணம் :—

**पुंनागनीलोत्पलकुन्दजाजीमन्दारमल्लीकरवीरपङ्कजैः ।**
**पुष्पाञ्जलिं बिल्वदलैस्तुलस्या मृत्युंजयांघ्रौ विनिवेशयामि ॥**

புந்நாக நீலோத்பல குந்த ஜாஜீ
மநதார மலலீ கரவீர பஙகஜை: ।
புஷ்பாஞ்ஜலிம பிலவதலைஸ்துலஸ்யா
மருத்யுஞ்ஜயாங்க்ரௌ விநிவேஶயாமி ॥

**मृत्युंजय**-யமனை வென்றவனே! **अंघ्रौ**-(உன்னுடைய) திருவடியில **पुंनाग**-புன்னை **नीलोत्पल**-கருநெய்தல் **कुन्द**-

குநதம் **जाजी**-ஜாஜீ **मन्दार**-மநதாரை **मल्ली**-மலலிகை **करवीर**-அரளி **पङ्कजैः**-தாமரை முதலிய மலர்களாலும் **बिल्वदलैः**-விலவ தளங்களாலும் **तुलस्या**-துளசியாலும் **पुष्पाञ्जलिं**-புஷ பாஞ்ஜலியை **विनिवेशयामि**-அாப்பணம் செய்கிறேன.

யமனே வென்றவனே ! நான் அஞ்ஜலியாக வைத்துக் கொணட என் இரு கைகளிலும நிறைய புனனே, கரு நெய்தல, குநதம், ஜாஜீ, மநதாரை, மலலிகை, அரளி, தாமரை முதலிய மலர்கஉளயும விலவதளங்கஉளயும் துளசியையும எடுத்துககொணடு அவைகஉள உனது திருவடிகளில ஸமர்ப்பணம செய்கிறேன். (40)

(அ) பிரதக்ஷிணம்:—

पदे पदे सर्वतमोनिकृन्तनं पदे पदे सर्वशुभप्रदायकम् ।
प्रदक्षिणं भक्तियुतेन चेतसा करोमि मृत्युंजय रक्ष रक्ष माम्॥

பதே பதே ஸர்வதமோநிக்ருநதனம
பதே பதே ஸாவஶுபப்ரதாயகம் ।
ப்ரதக்ஷிணம பக்தியுதேந சேதஸா
கரோமி மருத்யுஞ்ஜய ரக்ஷ ரக்ஷ மாம் ॥

**मृत्युंजय**-யமனே வென்றவனே ! **पदे पदे**-ஒவ்வொருஅடியிலும் **सर्वतमोनिकृन्तनं**-எலலா அகஞானத்தையும அறுக கின்றதும் **पदे पदे**-ஒவ்வொரு அடியிலும் **सर्वशुभप्रदायकं**-எல்லா நன்மைகஉளயும் கொடுககின்றதும் ஆன **प्रदक्षिणं**-பிரதக்ஷிணததை **भक्तियुतेन**-பக்தியோடு கூடிய **चेतसा**-மனதால **करोमि**-செய்கிறேன் **मां**-என்னே **रक्ष**-காப்பாற்று **रक्ष**-காப்பாற்று

யமனே வெனறவனே ! நான் உன்னே பன்முறை வலம் வந்து வணங்குகிறேன். இவ்வாறு உன்னேப் பிரதக்ஷிணம் செய்யும்பொழுது ஒவ்வொரு அடியிலும் அறியாமை எனும் இருள் நீங்குகிறது. ஒவ்வொரு அடியிலும் பற்பல நன்மைகள் ஏற்படுகினறன. உன்னே வலம வருவதால உண்டாகும் நலன்கள் எணணற்றன. ஏ பரம்பொருளே ! என்னே எப்பொழுதும் காத்தருள். (41)

(அ) நமஸகாரம் :—

नमो गौरीशाय स्फटिकधवलाङ्गाय च नमः
नमो लोकेशाय स्थितविबुधलोकाय च नमः ।
नमः श्रीकण्ठाय क्षपितपुरदैत्याय च नमः
नमः फालाक्षाय स्मरमदविनाशाय च नमः ॥ ४२ ॥

நமோ கௌரீஶாய ஸபடிக தவலாங்காய ச நம:
நமோ லோகேஶாய ஸதித விபுத லோகாய ச நம:।
நம: ஸ்ரீகணடாய க்ஷபித புர தைதயாய ச நம:
நம: பாலாக்ஷாய ஸமர மத விநாஶாய ச நம: ॥

**गौरीशाय**-மலைமகளின் பதிககு **नमः**-வணக்கம் **स्फटिक**-ஸ்படிகம் போல **धवलाङ्गाय**-வெளுபபான அஙகங்களையுடையவனுக்கு **नमः**-வ ண க க ம். **लोकेशाय**-உலகங்களையாளுகின்றவனுக்கு **नमः** - வணககம். **स्थितविबुधलोकाय** - தேவ ஜனஙகளைத தாங்குகின்றவனுக்கு **नमः** - வ ண க் க ம். **श्रीकण्ठाय**-அழகிய கழுததையுடையவனுககு **नमः** வணககம். **क्षपित**-நாசம் செயயப்பபட்ட **पुरदैत्याय** - திரிபுரன் என்ற அசுரனையுடையவனுககு **नमः**-வணக்கம். **फालाक्षाय**-நெற்றியில கண்ணுடையவனுககு **नमः**-வணக்கம் **स्मर**-மன்மதனுடைய **मद**-மததததை **विनाशाय**-நாசம் செய்த பரமேச்வரனுக்கு **नमः**-வணக்கம

மலைமகளான பாாவதீ தேவியின் பதியாயும் ஸ்படிகம் போல வெளுப்பான அங்கஙகளையுடை யவனுயும உலகங்கள் அனைத்தையும ஆட்சி செயகின்றவனுயும தேவர்களைக் காப்பாற்றியவனுயும அ ழ கி ய கழுததையுடையவனுயும் கழுத்தில விஷத்தைக்கொண்டவனுயும் திரிபுரன் என்ற அரக்கனை அழிததவனுயும நெற்றிககணணையுடையவனுயும் மனமதனுடைய காவத்தையழித்தவனுயும் உள்ள பரமேச்வரனுககு வணககம். (42)

(அ) பிரார்த்தனை.—

संसारे जनितापरोगसहिते तापत्रयाक्रन्दिते
नित्यं पुत्रकलत्रवित्तविलसत्पाशैर्निबद्धं दृढम् ।
गर्वान्धं बहुपापवर्गसहितं कारुण्यदृष्ट्या विभो
श्रीमृत्युंजय पार्वतीप्रिय सदा मां पाहि सर्वेश्वर ॥ ४३॥

ஸம்ஸாரே ஜநிதாபரோகஸஹிதே தாபதரயாகரந்திதே
நித்யம் புத்ர களதர வித்த விலஸத பாசைர்
நிபததம் த்ருடம் ।
கர்வாந்தம் பஹுபாப வாக ஸஹிதம காருணய
தருஷட்யா விபோ
ஸ்ரீ ம்ருத்யுஞ்ஜய பாாவதீ ப்ரிய ஸதா மாம்
பாஹி ஸாவேஶவர ||

**श्रीमृत्युंजय**-யமனை வென றவனே **विभो**-எஙகும் வியாபித்துள்ளவனே **पार्वतीप्रिय**-பாாவதீ தேவிககுப பிரியமானவனே **सर्वेश्वर**-எலலாவறறையும ஆட்சி செயகின் ற பரமேசவரனே **जनितापरोगसहिते**-பிறவித துன்பம, நோய முதலியவறறுடன் கூடியதும் **तापत्रयाक्रन्दिते**-மூன்று துன்பங்களால க த று கின் றதுமான **संसारे**-உலக வாழககையில **नित्यं**-எப்பொழுதும் **पुत्र**-பிளளை **कलत्र**-மனைவி **वित्त**-செலவம இவறறில **विलसत्**-விளங்குகின் ற **पाशैः**-பறறுதலகளாகிய கயிறுகளால **दृढं**-இறுக **निबद्धं**-கடடப்படடவனுயும **गर्वान्धं**- இறுமாப்பால் கண்ணை இழநதவனுயும **बहुपापवर्गसहितं**-பல பாவங்களின் கூட்டத்துடன் கூடியவனுயும உள்ள **मां**-என்னை **सदा**-எப்பொழுதும் **कारुण्यदृष्ट्या**-இரக்கத்துடன் கூடிய பார்வையினுல் **पाहि**-காப்பாற்று.

யமனை வென்றவனே! எங்கும் வியாபித்து நிற்கும் பரம்பொருளே! பார்வதீ மணுளனே! உலகனைத்தையும் காத்தருளும் உத்தமனே! இவ்வுலகம் பிறவி நோய் முதலிய பலவற்றுல பல இன்னலகளை விளைவிககின்றது இதனுள் குடியிருக்கும் பிராணிகள ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம, ஆதிதைவிகமெனும மூன்று துன்பங்களால துயருற்றுக் கதறுகின்றன. இததகைய உலக வாழ்க்கையில ஈடுபட்டுள்ள

நான் அதிக இறுமாப்புக்கொண்டுள்ளேன் மகவு, மனையாள் செலவம் முதலான பல பாசங்களால் இறுகக்கட்டப் பட்டுள்ளேன். மீண்டும் பல பாவங்களின் கூட்டங்களால சூழப்பட்டுள்ளேன் நீ என்மீது என்றும் உனது கருணை கடாக்ஷங்களைச செலுத்தி என்னை இரக்ஷித்தருள்வாயாக.

(அ) கடைசியாக ஆதிதம்பதிகளான பார்வதியும் மஹேசுவரனும் ஏகாந்தமாக இருககும் அவஸரத்தை தியானிக்கிறா : —

सौधे रत्नमये नवोत्पलदलाकीर्णे च तल्पान्तरे
कौशेयेन मनोहरेण धवलेनाच्छादिते सर्वशः ।
कर्पूराञ्चितदीपदीप्तिमिलिते रम्योपधानद्वये
पार्वत्या करपद्मलालितपदं मृत्युंजयं भावये ॥ ४४ ॥

ஸௌதே ரத்நமயே நவோத்பல தலாகீர்ணே ச தல்பாந்தரே
கௌசேயேந மனோஹரேண தவளேனாச்சாதிதே ஸர்வசः।
கர்பூராஞ்சித தீப தீப்தி மிளிதே ரம்யோபதாநத்வயே
பார்வத்யா கரபத்ம லாலிதபதம் ம்ருத்யுஞ்ஜயம் பாவயே ॥

**कर्पूराञ्चितदीप**-கற்பூரத்தால் அழகு வாய்ந்த விளக்கின் **दीप्ति**-ஒளியுடன் **मिलिते**-கூடிய **रत्नमये**-இரத்தினங்கள் பதித்த **सौधे**-அரண்மனையில **नवोत्पलदलाकीर्णे** - புதிதாக மலர்ந்த உத்பல மலாகள் பரப்பியுள்ளதும் **सर्वशः**-எல்லா இடங்களிலும் **धवलेन** - வெளுப்பானதும் **मनोहरेण**-மனதை வசீகரிக்கின்றதுமான **कौशेयेन**-பட்டினால் **आच्छादिते**-மறைக் கப்பட்டதும் **रम्योपधानद्वये**-அழகிய இரண்டு தலையணைகளை உடையதுமான **तल्पान्तरे**-படுக்கையின் நடுவில **पार्वत्या**-பார்வதீதேவியால் **करपद्मलालितपदं** - தாமரைபோன்ற கைகளால் வருடப்பட்ட பாதங்களையுடைய **मृत्युंजयं**-யமனை வென்ற பரமேசவரனை **भावये**-தியானம் செய்கிறேன்.

பரமேச்வரன் இரத்னங்கள் வைத்துக்கட்டப்பட்ட மாளிகையில சிறந்த மஞ்சத்தில் பள்ளிகொண்டிருக்கிறான் அக்கட்டிலின் மீது படுக்கையில் வெண்மையானதும் மிருது

வானதும் வழவழப்பானதும் மனதை வசீகரிக்கின்றதுமான பட்டு விரிக்கப்பட்டுள்ளது. அதன்மீது அழகிய இரண்டு தலையணைகள் வைக்கப்பட்டுள்ளன. அப்பொழுதே மலர்ந்த உத்பல மலரின் இதழ்கள் படுக்கையில் பரப்பப்பட்டுள்ளன. கற்பூரத்துடன் கூடிய திருவிளக்குகள் அந்த அரண்மனையில எங்கும் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன அவ்வாறு அவன் பள்ளிகொண்டிருக்கும்பொழுது பார்வதீதேவி அங்கு அமர்ந்து தனது மெலலிய பத்மம்போன்ற திருககரங்களால் அவனுடைய பாதங்களைப்பிடித்து விடுகிருள். அவ்வாறு பள்ளியிருக்கும் பரமேச்வரனை நான் தியானம் செய்கிறேன்.

(அ) இவ்வாறு சிவபூஜை செய்பவர்களுக்கு ஏற்படும் பலனைக்காட்டுகிருர்.—

चतुश्चत्वारिंशद्विलसदुपचारैरभिमतै-
मनःपद्मे भक्त्या बहिरपि च पूजां शुभकरीम् ।
करोति प्रत्यूषे निशि दिवसमध्येऽपि च पुमान्
प्रयाति श्रीमृत्युजयपदमनेकाद्भुतपदम् ॥ ४५ ॥

சதுஶ்சத்வாரிமஶத் விலஸதுபசாரைரபிமதைர்
மந:பத்மே பகதயா பஹிரபி ச பூஜாம ஶுபகரீம் ।
கரோதி ப்ரத்யூஷே நிஶி திவஸ மதயேऽபி ச புமான்
ப்ரயாதி ஸ்ரீமருதயுஞ்ஜய பதமநேகாத்புத பதம் ॥

यः पुमान्-எந்த மனிதன் अभिमतैः—பிரியமான चतुश्चत्वारिंशत्—நாறபத்துநான்கு विलसदुपचारैः—சிறந்த உபசாரங்களால मनःपद्मे—மனமாகிய தாமரையிலும் बहिरपि च-வெளியிலும் भक्त्या—பக்தியுடன் शुभकरीं-நன்மை செய்யக்கூடிய पूजां-பூஜையை प्रत्यूषे-அதிகாலையிலும் दिवसमध्येपि—நடுப்பகலிலும் निशि च—இரவிலும் करोति—செய்கிருனே सः—அவன் अनेकाद्भुतपदं- பல அற்புதங்களுக்கிருப்பிடமான श्रीमृत्युंजयपदं—யமனை வென்ற பரமேசவரனுடைய பாதாரவிந்தத்தை प्रयाति—அடைகிருன்.

இவ்வாறு இந்த துதியில் 44 சுலோகங்களால் நாற்பத்தி நான்கு உபசாரங்கள் வர்ணிக்கப்பட்டுள்ளன. இவைகள் அனைத்தும் பரமேசவரனுக்குகநதன. மிகச் சிறந்து விளங்குகின்றன. எந்த மனிதன் பக்திச்ரத்தையுடன் அதிகாலையிலும், நடுப்பகலிலும், இரவிலும் பரமேச்வரனைத் தனது இருதயகமலத்திலோ அலலது வெளியிலோ த்யானித்து இவவாறு பூஜிக்கிருனே அவன் பரமேசவரனது பாதகமலத்தை அடைகிருன். இநத சுலோகத்தில ஆசார்யாள் மானஸபூஜை, பாஹயபூஜை, இரண்டையும் அனுஷ்டிக்கும்படிக் கூறுகிருர். தாம் உட்கார்நதபடியே மனதில் பகவன் மூர்த்தியை தியானித்து இந்த ஸதோத்திரத்தில காட்டியுள்ளபடி எலலா உபசாரங்களும் நடைபெறுவதாக மனதால நினைப்பது மானஸபூஜை. இப்படியலலாமல் எதிரில பகவன் மூர்ததியை வைத்துககொண்டு எலலா திரவ்யங்களையும் சேகரித்து அந்தந்த திரவ்யங்களை அர்ப்பணம் செய்து பூஜிப்பது பாஹ்யபூஜை. பாஹ்ய பூஜையிலும் இதில கூறப்பட்ட திரவ்யங்களில ஏதாவது கிடைக்காமலிருந்தால அதை மானஸமாகத்தான் அர்ப்பணம் செய்யவேண்டும். இந்தப் பூஜையை தினநதோறும் காலை, மத்யானம், இரவு இந்த முககாலஙகளிலும் செய்ய வேண்டும் என்று கூறுகிருா. (45)

(அ) இந்தப் பூஜைக்கு அங்கமாக சிவலிங்க தர்சனத்தையும் பஞ்சாக்ஷர ஜபத்தையும் அவைகளின் பயனையும் கடைசி சுலோகத்தில குறிப்பிடுகிருர் —

प्रातर्लिङ्गमुमापतेरहरहः संदर्शनात्स्वर्गदं
मध्याह्ने हयमेधतुल्यफलदं सायंतने मोक्षदम् ।
भानोरस्तमये प्रदोषसमये पञ्चाक्षराराधनं
तत्कालत्रयतुल्यमिष्टफलदं सद्योऽनवद्यं दृढम् ॥ ४६ ॥

ப்ராதர் லிங்கமுமாபதேரஹரஹ ஸ்ஸந்தர்ஶநாத் ஸ்வர்கதம்
மத்யாந்ஹே ஹயமேத துல்ய பலதம் ஸாயந்தநே
மோக்ஷதம் |

பாநோரஸ்தமயே ப்ரதோஷ ஸமயே பஞ்சாக்ஷராராதநம்
தத்காலத்ரய துல்யமிஷ்டபலதம ஸதயோऽநவத்யம்
த்ருடம் ||

अहरहः-ஒவ்வொரு நாளும் प्रातः-காலையில संदर्शनात्-நன்கு தரிசனம செய்வதால उमापतेः-பரமேசவரனுடைய लिंगं-லிங்கம स्वर्गदं-ஸவாக்கததையளிககின்றது. मध्याह्ने-நடுப்பகலில हयमेधतुल्यफलदं-அசுவமேத யாகத்திற்குச சமமான பலனையளிககிறது. सायंतने-சாயங்காலத்தில் मोक्षदं-மோக்ஷத்தைத தருகிறது. भानोः अस्तमये-சூரியன் அஸ்தமிக்கும் பொழுதும प्रदोषसमये-பிரதோஷ காலத்திலும் पञ्चाक्षराराधनं-பஞ்சாக்ஷரமந்திரத்தால ஆராதிபபது सद्यः-உடனேயே अनवद्यं-குற்றமறறதாயும் दृढं-நிலைத்து நிற்பதாயும் तत्कालत्रयतुल्यं-அந்த மூன்று காலஙகளிலும் ஏற்படும் பலனுக்கு ஒப்பாகவும உளள इष्टफलदं-விரும்பிய பலனைத் தருகின்றது

பார்வதீ பதியான பரமேசவரனுடைய லிங்கத்தை தினநதோறும் காலை வேளையில தர்சனம் செய்வதால ஸவர்ககம் கிடைககிறது. மத்யான வேளையில தர்சனம் செய்வதால் அசுவமேதம என்ற வேள்வியைச செய்வதால் உண்டாகும் பலனுக்கு ஒப்பான சிறந்த பலன் உண்டாகிறது. சாயங்காலததில தரிசித்தால் மோக்ஷமேற்படுகிறது. சூரியன் அஸ்தமிககும்பொழுதும பிரதோஷ வேளையிலும் பஞ்சாக்ஷர ஆராதனை செயதால மூவேளைகளிலும் தாசனம் செய்வதால யாதுபயன் ஏறபடுமோ அதுபோன்ற விரும்பிய பலன் எலலாம் உடனேயே கிடைக்கின்றது. அது கலங்கமற்றதாயும் என்றும நிலைத்ததாயும் இருககும். (46)

ஸ்ரீ மிருத்யுஞ்ஜயமானஸிக பூஜா ஸ்தோத்திரம்

முற்றிறறு.

|| श्रीः ||

# || दशश्लोकीस्तुतिः ||

# தசச்லோகீஸ்துதி

[இந்த ஸ்தோத்திரத்தின் பெயரிலிருந்தே இது பத்து சுலோகங்கள் கொண்டது என்பதைத் தெரிந்து கொள்ளலாம் இந்த ஸ்தோத்திரத்தில் ஒவ்வொரு சுலோகத்தின் கடைசிப பாதத்திலும 'तस्मिन् मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि' (தஸ்மின் மே ஹ்ருதயம ஸுகேன ரமதாம ஸாமபே பரப்ரஹ்மணி- அந்த அம்பிகையுடன கூடிய பரமேசுவரனிடம் என் மனது ஸுகமாக விளையாடட்டும) என்று காணப்படு கிறது முதல் சுலோகததில் மட்டும எட்டு வேற்றுமை (விபக்தி) களையும காட்ட வந்தபடியால இதே வாகயம காணப் படாவிட்டாலும் 'मम रतिः साम्बे परब्रह्मणि' என்று இதன கருத்து காணபபடுகிறது. இதில் த்ரிபுர ஸம்ஹாரம, காமதஹனம, தன் நேத்ரத்தை ஸமாப்பித்த விஷ்ணுவுககு அனுகரஹம் செயதது, ப்ரஹ்மாவின் சிரஸ்ஸைக கொயதது, காலகூட பக்ஷணம முதலிய லீலைகளின மூலம ப்ரஹ்மா முதலான யாவருககும் நன்மை புரிந்த ஸாமபனே உயர்ந்த தெயவம் என்பதைக் காட்டி அவரிடமே என மனது நிலைத்து இன்புறட்டும் என்று வேண்டுகிறார். ஒனபதாவது சுலோகத்தில் மாணடூக்யோபநிஷத்தின கருத்தைக் காட்டு கிறார் ]

साम्बो नः कुलदैवतं पशुपते साम्ब त्वदीया वयं
साम्बं स्तौमि सुरासुरोरगगणाः साम्बेन सन्तारिताः ।
साम्बायास्तु नमो मया विरचितं साम्बात्परं नो भजे
साम्बस्यानुचरोऽस्म्यहं मम रतिः साम्बे परब्रह्मणि ॥ १ ॥

ஸாம்போ ந: குல தைவதம் பசுபதே ஸாம்ப த்வதீயா வயம்
ஸாம்பம் ஸ்தௌமி ஸுராஸுரோரக கணா: ஸாம்பேன ஸந்தாரிதா: ।

ஸாம்பாயாஸ்து நமோ மயா விரசிதம் ஸாம்பாத பரம் நோ பஜே
ஸாம்பஸயா நுசரோऽஸமயஹும் மம ரதி: ஸாம்பே பரப்ரஹ்மணி ॥

नः-நமக்கு साम्बः-அம்பிகையுடன் விளஙகும பரமேச வரன் कुलदैवतम्-குலத்தைக் காககும் கடவுள पशुपते-பசுக் களின் (பிராணிகளின்) தலைவனே! साम्ब-அமபிகையுடன் கூடிய பரமேசவரனே! वयं-நாங்கள எலலோரும த्वदीयाः- உன்னைச சேர்நதவாகள் साम्बं-அம்பிகையுடன் கூடிய பரமேசவரனை स्तौमि-துதிக்கிறேன सुरासुरोरगगणाः-தேவா கள, அஸுரர்கள, நாகாகள இவாகளின கூட்டங்கள எல்லாம் साम्बेन-அம்பிகையுடன் கூடிய பரமேச்வரனுல் संतारिताः-கரையேறறப்படடார்கள मया-என்னுல विरचितं- செய்யப்படட नमः-வணககம साम्बाय-ஸாமபனின் பொருட்டு अस्तु-இருககடடும साम्बात्परं-அம்பிகையுடன் கூடியபரமேச வரனைக காட்டிலும் வேறு ஒருவரையும नो भजे நான் போற்ற மாட்டேன் अहं-நான் साम्बस्य-அம்பிகையுடன கூடிய பரமேச வரனுடைய अनुचरः-பணியாளாக अस्मि-இருககிறேன் साम्बे- அம்பிகையுடன் கூடிய பரமேசவரனுன परब्रह्मणि-எஙகும் நிறைநதுளள பரமபொருளிடம் मम-எனக்கு रतिः-பிரியம் (இருககிறது)

பரமேசவரன் அம்பிகையுடன் சேர்நது உலகனைத்தை யும் படைத்துக் காத்தருளகினருன். அம்பிகையுடன் கூடிய பரம் பொருளே எலலா வலலமையும பெற்று விளஙகுகிருன். அவனே எனது குலதைதககாக்கும கடவுள. நாமெலலோரும் பசுக்கள் ஏனெனில அறியாமை என்னும காரிருளில அலலல படும் நமககும விலஙகுகளுக்கும் வித்யாசம எதுவும் இலலை. அவைகளும உணவு, தூககம, சிறறின்பம முதலிய வறறில ஈடுபடுகின்றன. நாமும் அவ்வித உணாசசிகளை உடையவர்களாய் இன்ப துன்பங்களுககுள உழலுகின்ருேம் இதையே पश्वादिभिश्चाविशेषात् எனறு ஸூததிர பாஷ்யத் தில் ஆசார்யாள கூறுகிருா மேலும் பசுககளைப்போல நாமும் ஸம்ஸாரபாசத்தால கடடுப்பட்டிருககிருேம. பரமேச் வரனே பசுபதி. பசுக்களைக் காக்கின்ற கோபாலன்

எவ்வாறு அவைகளை ஆபத்தினின்றும் இரக்ஷித்து அவை களுக்குரிய இடத்திற்கு ஓட்டிக்கொண்டுபோகிருளுே அவ் வாறே பரமேச்வரனும் நமமைப் பல இன்னலகளினின்றும் விடுவித்து பாசத்தைப்போக்கி பரமபதத்தை அடையச செய்கிருன். ஆதலால நாமனைவரும் அப் பசுபதியைச சார்நதவர்கள். அவனுலேயே கணககறற பகதர்கள துன்பக கடலிலிருநது கரையேற்றப்பட்டிருககிருாகள. தேவர்களும் அஸுராகளும் நாகாகளும் அவருடைய அருளாலேயே இன்னலகள நீங்கி நன்மை பெறறனர். அவ்வாறு விளங்கும் அம்பிகையின் பதியான பரமேச வரனுக்கு நான் வணக்கம் செலுத்துகிறேன். அமபிகா பதியான பரமேசுவரனைக் காட்டிலும வேறு ஒருவரையும் நான் பஜிககமாட்டேன். ஏனெனில நான் பரமேச்வர னுடைய வேலையாள. அமபிகையின் பதியான பரமேச வரனே எங்கும் நிறைநத பரம்பொருள். அவனிடம் என மனது ஈடுபடட்டும்.

மாயா ஸம்பநதமறற ஸசசிதானந்த வடிவம்தான் பரப்ரஹ்மம் என்பது. அந்த நிலையில ஜகத் ஸ்ருஷடியோ, ரக்ஷணமோ, அனுகரஹமோ, லீலாவிலாஸமோ ஒன்றும் கிடையாது அது மனதிற்கும, வாக்குககும எடடாதது. அதில மனதைச செலுத்துவதோ, ஸதோத்திரம் செய்வதோ முடியாதகாரியம் இஙகு, தான ஸதுதிசெயயும பரப்ரஹ மத்தில மனது இனபுறறிருககவேணடுமென வேண்டுகிருர். ஆகவே இங்கு பரப்ரஹமம் எனபது பக்தாகளை அனுக்ரஹிப்பதற்காக மாயையுடன் சேர்ந்து தன் இச்சைப் படி சரீரத்தை எடுத்துககொண்ட ஸகுணமான பரமேசு வரனைக் குறிககிறது குழநதைகளிடம மிகுநத வாத்ஸலயம் கொண்ட ஜகன்மாதாவான அமபிகையுடன் சேர்நதிருந் தால்தான் தாயின் சிபார்சால நாம் செயத குற்றங்களை மன்னிதது பரமேசுவரன் கிருபைபுரிவார். அதனுலதான் இங்கு ஸாம்ப பரமேசுவரனை வேண்டுகிருர்.

இங்கு நிாகுண வஸதுவைக குறிபபிடும் '**परब्रह्मणि**' என்ற பதத்திறகு '**साम्बे**' என்பது விசேஷணமாகக்

கொடுக்கப்பட்டிருக்கிறது. இதனால் நிர்குணமும் ஸகுணமும் வெவ்வேறலல, ஒரே தத்வமதான் என்பதைக் காட்டுகிறார். உள்ளது நிாகுணமதான் அதுவே உணமையபொருள். அதுவே வாஸதவமலலாத மாயையால ஸகுணமாகத் தோறறம் அளிககிறது. பலவித வேஷஙகளுடன் பிரஜை களுககு மஹாராஜனுகக காக்ஷியளிககும மனிதனே எலலா வறறையும் களைநது அநதப்புரததில மஹாராணிககு சுத்த ஸவருபனுகக் காக்ஷியளிககின்றான்

இநத சுலோகத்தில 'எனககு ஸாம்ப பரமேசுவரரிடம் பிரீதி இருககட்டும' என்று கூறுகிறாா. இதையே சறறு விரிவாகப் பின் சுலோகஙகளில என் மனது ஸுகமாக ஸாம்பனிடம் ரமிககட்டும என்று கூறுகிறாா உலகில எல்லோருககும் மனைவி, குழநதை, பணம முதலியவற்றில் மிகுநத ப்ரீதி இருக்கிறது. இது இருக்கும்வரை பகவா னிடம் ப்ரீதி ஏற்படாது இவை கிடைப்பதறகாக ஒரு சமயம் பகவானிடம பரிதி வைத்தாலும அது ஸ்திரமாக இருக்காது அவை கிடைத்தவுடன் விலகிவிடும் ஆகவே பகவானிடம நிரதிசயமான ப்ரீதி ஏற்படவேணடுமானால அவருடைய கல்யாண குணங்களைத் தெரிந்து கொள்வ துடன் உலக விஷயங்கள் யாவற்றிலும் பூாண வைராக்யம் ஏறபடவேண்டும். காமுகன் மனம் எப்பொழுதும் அனுயாஸ மாக பெண்களிடம் செலவதுபோல் பகவானிடம் ஸுகமாக மனம் நிலை பெற்றிருக்கவேண்டும. இதையே இங்கு வேண்டுகிறாா.

இந்த தசசலோகீஸ்துதி ஶாாதூல விக்ரீடதம் என்ற சந்தஸில் எழுதப்பட்டுள்ளது. இந்த முதல சுலோகத்தில ஏழு வேறறுமைகளின் ப்ரயோகமும் அவைகளின் பொருளும் நன்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இதனால இதைப் படிப்பவாகளுககு பகதியேற்படுவதுடன் ஸம்ஸ்கிருதபாஷா ஞானமும நன்கு ஏற்படும். (1)

(அ) த்ரிபுரஸம்ஹாரம் செயது தேவாகளைக் காப்பாற்றிய வரலாற்றைக் கூறுகிறாா:-

विष्ण्वाद्याश्च पुरत्रयं सुरगणाः जेतुं न शक्ताः स्वयं
यं शंभुं भगवन्वयं तु पशवोऽस्माकं त्वमेवेश्वरः ।
स्वस्वस्थाननियोजिताः सुमनसः स्वस्था बभूवुस्तत-
स्तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ २ ॥

விஷ்ண்வாதயாஶ்ச புரத்ரயம் ஸுரகணு ஜேதும்
ந ஶக்தா : ஸ்வயம்
யம் ஶம்பும் பகவன் வயம் து பஶவோऽஸ்மாகம்
த்வமேவேஶ்வர: ।
ஸ்வஸ்வஸ்தாநநியோஜிதா· ஸுமநஸ : ஸ்வஸ்தா
பபூவுஸ்தத:
தஸ்மின் மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே
பரப்ரஹ்மணி ॥

**विष्ण्वाद्याः**-விஷ்ணு முதலிய **सुरगणा· च**-தேவர்களுடைய கூட்டங்களும **पुरत्रयं**-மூன்றுபட்டினங்களையுடைய திரிபுரர்களை **स्वयं**-தாங்களாகவே **जेतुं**-வெலல **न शक्ताः**-இயலாதவாகளாக **यं शंभुं**-எநத சிவ பெருமானை '**भगवन्**-எலலா வலலமைகளும வாய்நதவனே **वयंतु**நாங்களோ எனில **पशवः**-பசுக்கள் **अस्माकं**-எங்களுக்கு **त्वमेव**-நீயே **ईश्वर.**-ரக்ஷகன' (என்று உரைததனரோ) **ततः**-த்ரிபுரஸமஹாரம் செய்தபின் **स्वस्वस्थाननियोजिताः**-தங்கள் தங்கள பதவிகளில அமர்த்தப்பட்ட **सुमनसः**-தேவர்கள் **स्वस्थाः बभूवुः**-ஸவஸ்தர்களாக ஆனுர்களோ **तस्मिन्**-அப்படிபபட்ட **साम्बे**-அம்பிகையுடன் கூடிய **परब्रह्मणि**-பரம்பொருளிடத்தில **मे**-என்னுடைய **हृदयं**-மனம **सुखेन**-ஸுகமாக **रमताम्**-விளையாடட்டும்.

முன் ஒரு ஸமயம் தாரகாஸுரன் குமாரர்களான தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி இம்மூவரும் பிரஹ்மாவின் வரபலத்தால் தங்கம், வெள்ளி, இரும்பு இவைகளால் தனித்தனியாக மூன்றுபுரங்களை நிர்மாணித்துக் கொண்டு அவைகளுடன் ஆகாசத்தில் பறந்து வந்து அமர்ந்து உலகைத்துன்புறுத்தி வந்தனர். தேவர்கள் எல்லோரும் சேர்ந்து அவர்களுடன் சண்டையிட்டுத்தோல்வி

அடைந்தவர்களாய் தங்கள் ஸ்தானங்களை இழந்து தேவ லோகத்தை விட்டு மேரு மலையில ஒளிநதுகொண்டு தவம் செய்தனர். நேரில தாசனம் கொடுத்த பரமேசுவரனிடம் தாஙகள் படும் துன்பத்தைச் சொலலி முறையிட்டனர். 'ப்ரபோ, நாங்கள் எலலோரும் பசுக்கள. நீயோ பசுபதி. எங்கள துன்பத்தைப போககுவது உம கடமையலலவா! உலகைத்துன்புறுத்திவரும் அஸுராகளையழித்து எங்களைக் காப்பாற்றவேணடும் வேறுகதியிலலை' என்று வேணடினர். பிறகு பகவான் புறப்படடு யுத்தத்தில த்ரிபுரர்களை ஸம்ஹாரம் செயது தேவாகளின துன்பததைபபோக்கி அவரவா பதவியில தேவாகளை நிலைநிறுததினா. பிறகு பரமேசன் கிருபையால தேவாகள இழநத தங்கள் ஸ்தானங களை மீணடும பெற்று ஸ்வஸ்தாகளாகி (ஸ்வாகலோகத்தில வஸிப்பவாகளாகவும தஙகள தங்கள இடங்களில இருப்பவாகளாகவும் ஆகி) ஆனநதம் அடைந்தனர். இவ்வாறு ஒருவராலும் செயயமுடியாத தரிபுர ஸம்ஹாரத்தைச செயது உலகைககாபபாறறிய ஸாம்ப னிடத்திலேயே என் மனம இன்பம் அடையவேணடும் (2)

(அ) த்ரிபுரஸமஹாரத்தில தேவர்கள் செய்த பணிகளைக் கூறுகிறார்:—

क्षोणी यस्य रथो रथाङ्गयुगलं चन्द्रार्कबिम्बद्वयं
कोदण्डः कनकाचलो हरिरभूद्बाणो विधिः सारथिः ।
तूणीरो जलधिर्हयाः श्रुतिचयो मौर्वी भुजङ्गाधिपः
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ३ ॥

க்ஷோணீ யஸ்ய ரதோ ரதாங்க யுகளம் சநத்ரார்க்க பிம்பத்வயம்
கோதண்ட: கனகாசலோ ஹரிரபூத் பாணோ விதி: ஸாரதி: ।
தூணீரோ ஜலதிர் ஹயா: ச்ருதிசயோ மௌர்வீ புஜங்காதிப:
தஸ்மின் மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே பரப்ரஹ்மணி ।

**यस्य**-எவனுக்கு **क्षोणी**-பூமி **रथः**-தேராகவும் **चन्द्रार्कबिम्ब द्वयं**-சந்திர சூரியர்களுடைய இரண்டு பிம்பங்களும் **रथाङ्ग-युगल**-தேரின் இருசக்கரங்களாயும் **कनकाचलः**-மேருமலை **कोदण्डः**-வில்லாகவும் **हरिः**-விஷ்ணு **बाणः**-கணையாகவும் **विधिः**-நான்முகன் **सारथिः**-தேரோட்டியாகவும் **जलधिः**-ஸமுத்திரம் **तूणीरः**-அம்புறுத்தூணியாகவும் **श्रुतिचयः**-நான்கு வேதங்களும் **हयाः**-குதிரைகளாகவும் **भुजङ्गाधिपः**-பாம்புகளுக்கு அரசனுகிய வாசுகி **मौर्वी**-நாண்கயிருகவும் **अभूत्**-ஆயிற்றோ **तस्मिन्**-அந்த **साम्बे**-அம்பிகையுடன் கூடிய **परब्रह्मणि**-பரம்பொருளிடத்தில் **मे**-என்னுடைய **हृदयं**-மனம் **सुखेन**-ஸுகமாக **रमताम्**-விளையாடட்டும்.

த்ரிபுரர்களால் துன்புறுத்தப்பட்ட தேவர்கள் எல்லோரும் சேர்ந்து பகவானிடம் முறையிட்ட பொழுது மஹேசன் "அரக்கர்களுடன் சண்டையிடுவதற்கு படைக் கலங்கள் வேண்டுமே. அவை இருந்தால் யுத்தம் செய்து அரக்கர்களை அழிக்கலாம்" என்று கூறினர். த்ரிபுர ஸம்ஹாரம் செய்ய தேவர்கள் சிறிதும் சக்தியற்றவர்கள் என்பதும், வேறு உதவியோ, முயற்சியோ ஒன்றும் இல்லாமல் சும்மா இருக்கும் நிலையிலேயே தான் ஒருவனே அவர்களை அழிக்கமுடியும் என்பதும் உலகிற்கு வெளிப்பட வேண்டும் என்பது ஈசனின் கருத்து. ஈசன் வார்த்தையைக் கேட்ட தேவர்கள் "இந்த அஸுரர்களை அழிக்க தங்கள் படைக்கலங்களுக்கு வலிமை போதாது. தாங்களே படைக் கலங்களின் உரு எடுத்துககொண்டு தங்கள் சக்தியின் மூலம் அஸுரர்களை அழிக்க ஈசனுக்கு உதவிசெய்ய வேண்டும்" என எண்ணினர். உடனே பூமியைத் தேராகவும், ஸூர்யனையும் சந்திரனையும் இரு தேர்ச்சக்கரங் களாகவும், நான்கு வேதங்களையும் குதிரைகளாகவும், பிரஹ்மாவை ஸாரதியாகவும், மேரு மலையை வில்லாகவும், விஷ்ணுவை அம்பாகவும் வாஸுகியை ஞாண் கயிருகவும், ஸமுததிரத்தை அம்புராத்தூணியாகவும், ஆக்கி ஸஜ்ஜப் படுத்தினர். பரமேசுவரனும் தேரில் ஏறிக்கொண்டு எலலாவற்றையும் கைக்கொண்டு த்ரிபுரர்களுடன் சண்டை

யிடத் தயாரானுர். ஆனுல இநதப் படைக்கலஙகளைக் கொண்டு சண்டையிட முடியவில்லை. அதனதன் காரி யத்தைககூட அ வை க ள செய்யவிலலை. பாணமாக அமைந்த விஷ்ணு காத்தறகடவுளானபடியால ஸமஹாரம் செய்ய விருமபவில்லை. தேர்ச சககரங்களாக அமைநத ஸூாய சநதிராகள் ஒரே சமயததில ஒரே பககமாகச செலல விலலை. வேதங்களாக அமைநத குதிரைகள் தேரில இருக் கும் பகவானையே பார்த்து நிறகின்றன. எதிர்புறமாகச் செலலவிலலை. இநத நிலைமையைப் பார்த்து மஹேசன் சிரித்தார். அந்த சிரிப்பினுலேயே அரக்கர்கள் சாம்பலாகி விட்டனர்.

'क्रियासिद्धिः सत्वे भवति महतां नोपकरणे' என்று ஓர் கவி இதே கருத்தைக் கூறுகிருர். இவ்வாறு ப்ரஹ்மாதி தேவா களும்கூட படை ககலமாகி எவருக்கு ஸேவைசெய்தனரோ, எவா ஒருவருடைய உதவியுமிலலாமல தானும சிரமப் படாமல சிரிப்பினுலேயே அரககாகளை அழிததாரோ, அந்த ஸாம்பனிடம் என் மனம் நிலைதது இன்பம அடை யட்டும.

இந்த த்ரிபுரஸம்ஹாரம் என்பது வேருெரு தத்வாத் தத்தையும் வ்யங்க்யமாகப் புலப்படுததுகிறது சரீரத்திற்கு 'புரம்' என்ற பெயர் கீதையிலும் உபநிஷத்திலும் காணப் படுகிறது. 'नवद्वारे पुरे' 'पुरमेकादशद्वारं' ஸ்தூலம், ஸூக்ஷ்மம், காரணம் என்று மூன்று சரீரங்கள். ரக்தம், மாம்ஸம் முதலியவை ஸதூலம். ஐந்து பிராணன்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து ஞானேந்திரியஙகள மனம், புத்தி இவை ஸூக்ஷ்ம சரீரம். அக்ஞானம் காரண சரீரம். இவைகளால தான் நாம் துன்புறுகிருேம். இந்திரியங் களிலும் மனதிலும் ஏறபடும் ராஜஸ தாமஸ விருததிகளே அஸுரர்கள. இவைகளால மேலும் மேலும் பல பல கீழப பிறவிகளையடைநது அல்லலபடுகிருேம். ஸாத்விக விருததி களே தேவாகள். அவைகளால பரமாத்ம ஸ்வரூபததை தியானித்து தத்வத்தை அறியமுறபட்டால மஹேசன் கிருபைகூர்ந்து ஞானத்தை அருள்கிருர். ज्ञानमिच्छेन्महेश्वरात् ஞானம் ஏற்பட்டால் முப்புரங்களும் அழிந்துவிடுகின்றன.

மறுபடியும் பிறவி ஏற்படுவதில்லை. ஸ்வஸ்தனாக ப்ரஹ்மானந்தத்தை அடைகிறான். (3)

(அ) காமதஹனம், ப்ரஹ்மசிரஸ்சேதம், விஷ்ணு நேத்ரத்தால் பூஜித்தது, இவைகளால் ஸாம்பனின் உத்கர்ஷத்தைக் காட்டுகிறார் :—

येनापादितमङ्गजाङ्गभसितं दिव्याङ्गरागैः समं
येन स्वीकृतमब्जसम्भवशिरः सौवर्णपात्रैः समम् ।
येनाङ्गीकृतमच्युतस्य नयनं पूजारविन्दैः समं
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ४ ॥

யேநாபாதிதமங்கஜாங்கபஸிதம் திவ்யாங்கராகை: ஸமம்
யேந ஸ்வீக்ருதமப்ஜஸம்பவ ஶிர: ஸௌவர்ண பாத்ரை:
ஸமம் ।
யேநாங்கீக்ருதமச்யுதஸ்ய நயநம் பூஜாரவிந்தை: ஸமம்
தஸ்மின் மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே
பரப்ரஹ்மணி ॥

येन-எந்த பரமேச்வரனால் अङ्गजाङ्ग भसितं-மன்மதனுடைய உடலின் சாம்பல் दिव्याङ्गरागैः-திவ்யமான வாசனைப் பூச்சுகளோடு समं-ஸமமாக आपादितं-செய்யப்பட்டதோ येन-எந்த பரமேசவரனால் अब्जसम्भव-தாமரையிலிருந்து உண்டான நான்முகக்கடவுளின் शिरः-தலை सौवर्णपात्रैः-தங்கத்தினால் செய்யப்பட்டபாத்திரங்களுக்கு समं-ஸமமாக स्वीकृतं-ஏற்றுக் கொள்ளப்பட்டதோ येन-எந்த பரமேசவரனால் अच्युतस्य--விஷ்ணுவின் नयनं-கண் पूजारविन्दैः-பூஜைக்குகந்த தாமரைகளுக்கு समं-ஸமமாக अङ्गीकृतं-அங்கீகரிக்கப்பட்டதோ तस्मिन्-அப்படிப்பட்ட साम्बे-அம்பிகையுடன் கூடிய परब्रह्मणि-பரம்பொருளிடத்தில் मे-என்னுடைய हृदयं-மனம் सुखेन-ஸுகமாக रमताम्-இன்புற்றிருக்கட்டும்.

காமத்தை உண்டுபண்ணி உலகம் முழுவதையும் அடக்கியாளும் மன்மதன் தனியாக வீற்றிருக்கும் பரமசிவனையும் தன்வசமாக்க எண்ணி மலரம்புகளை எய்தான்.

அவர் மனதிலும காமம் எழும்படி முயறசித்தான். ஆனல அவர் நெறறிக்கண்ணைத்திறக்கவே அதிலிருநது கிளமபிய தீபபொறியால காமன் எரிநதுபோனன். காமனது உடல சாம்பலேயே சிறநத வாசனைபபொடியாக எணணி தன் சரீரத்தில பூசிக்கொண்டாா உலகில காமனை ஜயித்தவர் ஈசுவரன் ஒருவரே.

ஆதியில பிரஹமாவுககும ஐந்து தலைகள் இருநதன. அதனல அவா "உலகை ஸிருஷடிககும தானே மேலான தெய்வம் தனககு மேறபடடவா ஒருவரும் இலலை" எனச் செருககுறறிருந்தாா அவருடைய கர்வததைப் போக்கி அனுகரஹம் செய்வதறகாக அவா எதிரில பரமேசன் ஜயோதிருபமாகததோன்றி அதன் நடுவில உமாமஹேசுவர னுகவும காக்ஷி கொடுத்தாா. அதைககணடும் அஹநதை நீங்காமல மஹேசனைப்பலவாறு இகழநது பேசினர். உடனே சினங்கொணடு தன்னை இகழநது பேசிய தலையை மட்டும தன் நகததால் கொய்தாா அதன்பின் அவர் நான்முகராய விட்டார். பிறகு காவம் நீங்கப்பெற்று ப்ரஹமா மஹேசனின் காலில விழுநது வணஙகி பலவாறு துதித்து அவர் அருளைப்பெறருா அநதததலையை தங்கப் பாததிரத்தைப்போல கையில வைத்துககொண்டிருக்கிறர் பரமசிவன். படைத்தறகடவுளான பிரஹ்மாவையும் அடக்கியவர் ஸாம்பனே.

விஷ்ணுவின் சக்ரம் ததீசிமுனிவரிடம் பிரயோகிக்கப் பட்டு ஒடிந்து போயவிடவே அமமாதிரி மறறேர் சக்ராயுதம் பெறுவதறகாக விஷணு பரமேசனை தினமும் ஆயிரம தாமரைகளால பூஜிதது வநதார். ஒருநாள ஈசுவர ஸஙகல பத்தால ஒரு தாமரைப்பூ மறையவே ஆாசசனை முடியும சமயத்தில ஒரு புஷ்பம குறைநதிருப்பதை அறிநத விஷணு தாமரை போன்ற தமது ஒரு நேத்ரத்தைப் பிடுஙகி அதைக கொண்டே பகவானை ஆாசசித்து பூஜையை முடிததார். ஸநதோஷம் அடைநத மஹேசுவரன் நாராயணனுககுக் கணணைககொடுத்து மிகுந்த சக்தியுளள சகராயுதத்தையும் தந்தருளினர். காத்தறகடவுளான விஷ்ணுவுக்கும்

அனுக்ரஹம்செய்த மூர்த்தி ஸாம்பனே. அவரிடம் என்மனது நிலைத்திருக்கட்டும். இதைப்பற்றி விரிவாக ஏழாவது சுலோகத்தில காணலாம. (4)

(அ) மேலும சிவோத்கர்ஷத்தைக் காட்டுகிறார் :—

गोविन्दादधिकं न दैवतमिति प्रोचार्य हस्तावुभा-
वुद्धृत्याथ शिवस्य संनिधिगतः व्यासो मुनीनां वरः ।
यस्य स्तम्भितपाणिरानतिकृता नन्दीश्वरेणाभव-
त्तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ५ ॥

கோவிந்தாததிகம் ந தைவதமிதி ப்ரோசசார்ய
ஹஸ்தாவுபா -
வுத்த்ருத்யாத ஶிவஸ்ய ஸநநிதிகத: வ்யாஸோ
முநீநாம் வர: ।
யஸ்ய ஸ்தம்பித பாணிராநதிகருதா நந்தீஶவரேணாபவத்
தஸ்மின் மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாமபே
பரப்ரஹமணி ॥

गोविन्दात् अधिकं-கோவிநதனைக் காட்டிலும் மேலான दैवतं-தேவதை न-இலலை इति-என்று प्रोचार्य-உரக்கக் கூறிக் கொண்டு अथ-பிறகு उभौ-இரு हस्तौ-கைகளையும் उद्धृत्य-உயரத் தூககிக்கொணடு शिवस्य-சிவபெருமானுடைய संनिधिगतः-ஸநநிதியை அடைநத मुनीनां-முனிவர்களுக்குள் वरः-சிறநத व्यासः-வியாஸர் यस्य-எந்த சிவபெருமானுக்கு आनतिकृता-வணக்கததைச செய்கின்ற नन्दीश्वरेण-நந்தி தேவனால स्तम्भितपाणिः-அசைவின்றி செய்யப்பட்ட கைகளை உடையவராக अभवत्-ஆனாரோ तस्मिन्-அப்படிப்பட்ட साम्बे-அம்பிகாதேவியுடன் கூடிய परब्रह्मणि-பரம் பொருளிடத்தில் मे हृदयं-என்னுடைய மனம் सुखेन-ஸுகமாக रमताम्-விளையாடிக கொண்டிருக்கட்டும்.

வ்யாஸர் முனிவாகளுள் சிறந்தவர். அவரே நான்கு வேதஙகளையும் வகுததுககொடுத்தவர். அதனாலேயே அவருககு வேதவ்யாஸர் என்ற பெயர் வழங்கலாயிற்று.

மேலும் அவர் பதினெட்டுப் புராணங்களையும் இயற்றி யுள்ளார். இவ்வாறு சிறந்து விளங்கும வியாஸர் ' மஹா விஷ்ணுதான் எலலா தேவர்களைக்காட்டிலும் சிறந்தவர். அவரைக்காட்டிலும மேலானவர் வேறு யாருமிலா ' என உரைத்துக்கொண்டு சிவனுடைய ஸந்நிதியையடைந்தார். அவர் தனனுடைய கருத்தைச சித்தாநதப்படுததத் தனது இரு கைகளையும் உயரததூக்கிககொணடு சிவஸந்நிதி யிலேயே அவ்வாறு கூறினா. அப்பொழுது நநதிகேசுவரா சிவனுககுப பணிவிடை செயதுகொணடிருநதாா. அதைக் கண்டவுடன் அவா வியாஸருடைய கையை ஸ்தம்பிககச் செய்துவிட்டாா. உயரததூககிய கை அப்படியே அசை வற்று இருநதது கீழே இறககமுடியவிலலை. அதனுல வியாஸர் தனனுடைய கருத்தை நிலைநாட்டமுடியாமல போய்விட்டது ஆகையால பரமேசவரன ஒருவனே பிரம்மா, விஷ்ணு, ருதரன் என்ற மூவருககும் மேலானவன். அவனே பரம்பொருள் என்று தீர்மானிககப்படுகின்றது. (5)

(அ) பரமசிவனின் விராட்ரூபத்தையும தத்வத்தையும் காட்டுகிறா:—

आकाशश्चिकुरायते दशदिशाभोगो दुकूलायते
शीतांशुः प्रसवायते स्थिरतरानन्दः स्वरूपायते ।
वेदान्तो निलयायते सुविनयो यस्य स्वभावायते
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ६ ॥

ஆகாமஸ்சிகுராயதே தமதிமாபோகோ துகூலாயதே
மீதாம்மு: ப்ரஸவாயதே ஸ்திரதராநந்த: ஸ்வரூபாயதே |
வேதாந்தோ நிலயாயதே ஸுவிநயோ யஸ்ய ஸ்வபாவாயதே
தஸ்மின் மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே
பரப்ரஹ்மணி ||

**यस्य**–எந்த பரமேச்வரனுககு **आकाशः**–ஆகாயம் **चिकुरायते**–தலை மயிராக ஆகின்றதோ **दशदिशाभोगः**–பத்து திக்குகளின் பரப்பும் **दुकूलायते**— பட்டு வஸ்திரமாக ஆகின்றதோ **शीतांशुः**— குளிர்ந்த கிரணங்களையுடைய

சந்திரன் प्रसवायते-(தலையில் சூட்டியுள்ள) மலராக விளங்கு கிருனே स्थिरतरानन्दः-என்றும நிலைத்து நிற்கும் ஆனந்தம் स्वरूपायते-ஸ்வரூபமாக விளங்குகின்றதோ वेदान्तः- உபநிஷத்து निलयायते-இருப்பிடமாக இருக்கிறதோ सुविनयः- நலல அடக்கம स्वभावायते-இயற்கையான குணமாகிறதோ तस्मिन्--அப்படிபபட்ட साम्बे--அம்பிகையுடன்கூடிய पर-ब्रह्मणि-பரப் பிரம்மத்தினிடத்தில मे हृदयं-என் மனம் सुखेन- ஸுகமாக रमताम्-களிததிருககட்டும்.

பரமேசுவரனுக்கு ஆகாசம் கேசமாக அமைந்திருக் கிறது 'வ்யோமகேசன்' என்பது அவனுடைய பெயர். இதன் கருத்து எனனவெனில பிரபஞசம் முழுவதும் அவன் சரீரம என்பது. சரீரம என்றுல பாதாதிகேசாநத அவயவங் கள் இருக்கவேண்டும் அதறகாக இவ்வாறு கூறப்பட்டிருக் கிறது. உருவமற்ற பரமேசுவரனே மனதில தியானிப்பதற் காக பிரபஞசத்தை உருவமாக சாஸ்திரங்கள் கூறுகின்றன. திசைகளே ஆடைகளாக அமைநதுள்ளன திகம்பரன் என்று பெயர் திசை ஆடையாறுல அதறகுட்பட்ட பிரபஞசம் முழுவதும் அவனது சரீரம் என்று கிடைக்கிறது ஆகாசம் கேசமாக அமைந்ததும் அதில பிரகாசிககும் சந்திரன் கேசத்தில சூடிககொளளுமு மலராக ஆகிருன். சந்திரசேகரர் என்று அவனுக்குப்பெயர். இவை எலலாம் தியானம செய்வதற்காகக் கலபிககப்பட்டது வாஸ்தவ மல்ல. மாயையினுல தோன்றும் பிரபஞ்சம் உண்மையிலலே. ஆகவே பிரபஞசமாகிய சரீரமும் அவருடைய உண்மை ஸ்வரூபமிலலே. வாஸதவத்தில அவருக்கு சரீரமோ, உருவமோ ஒன்றும் கிடையாது. ஆனநதமே அவருடைய உண்மை ஸ்வரூபம். உலகில நாம் விஷயங்களில் பெறும் ஆனந்தம் உடனே மறைந்துவிடுகிறது பகவானுடைய ஸ்வரூபமான ஆனந்தம் எப்பொழுதும நிலைத்து இருப்பது, ஸத்தானது ஸச்சிதானந்தமே அவன் ஸ்வரூபம். இந்த தத்வத்தை உபநிஷத்துககளின் மூலமதான் அறிய வேண்டும. அவைகளே அவனது இருப்பிடம். விநயமே அவரது ஸ்வபாவம். அதாவது ஒரு விகாரமும் இல்லாமல்

சாந்தமான ஸ்வரூபம். இவ்வாறு ஜகத்சரீரியாகவும் உண்மையில் அசரீரியாகவும் ஆனந்தவடிவமாகவும் விளங்கும ஸாம்பனிடம் என் மனது ரமிக்கட்டும. (6)

(அ) மஹாவிஷ்ணுவுக்கு அருள்செய்த லீலையை வர்ணிககிறுா:—

विष्णुर्यस्य सहस्रनामनियमादम्भोरुहाण्यर्चय-
न्नेकोनोपचितेषु नेत्रकमलं नैजं पदाब्जद्वये ।
संपूज्यासुरसंहतिं विदलयंस्त्रैलोक्यपालोऽभव-
त्तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ७ ॥

விஷ்ணுர் யஸ்ய ஸஹஸ்ரநாமநியமாதமபோருஹா-
ணயர்சயன
ஏகோநோபசிதேஷு நேத்ரகமலம நைஜம பதாபஜ த்வயே ।
ஸம்பூஜ்யாஸுர ஸம்ஹாதிம விதலயமஸதரைலோக்ய
பாலோऽபவத்
தஸ்மின் மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம ஸாமபே
பரப்ரஹமணி ॥

**सहस्रनामनियमात्**-ஆயிரம் திருநாமங்களைச சொல்லிப் பூஜை செயதல என்ற நியமத்துடன **अम्भोरुहाणि**-தாமரை மலர்களை **अर्चयन्**-(தினமும) பூஜித்துக கொண்டுவரும் **विष्णुः**-விஷ்ணுவானவா **एकोनोपचितेषु**-(ஒரு நாள) சேகரிக்கப்பட்ட புஷபங்களில ஆயிரததுககு ஒன்று குறைவாக இருககும்பொழுது **नैजं**-தனனுடையதான **नेत्रकमलं**-கண்ணுகிய தாமரையை **यस्य**-எந்தப் பரமேசனுடைய **पदाब्जद्वये**-இரண்டு தாமரைபோன்ற பாதஙகளில **संपूज्य**-நன்கு பூஜித்து **असुरसंहतिं**-அஸுராகளின் கூட்டத்தை **विदलयन्**-நாசம் செய்து கொணடு **त्रैलोक्यपालः**-மூவுலகையும் காப்பவராக **अभवत्**-ஆனுரோ **तस्मिन्**-அப்படிப்பட்ட **साम्बे**-அம்பிகையுடன்கூடிய **परब्रह्मणि**-பரம் பொருளிடத்தில **मे**-என்னுடைய **हृदयं**-மனம் **सुखेन**-ஸுகமாக **रमताम्**-விளையாடட்டும்.

ஒரு சமயம் மஹாவிஷ்ணு தேவர்களுக்குப் பற்பல இன்னலகளை விளைவிக்கும் அஸுரர்களை அழிப்பதற்காகச் சக்ராயுதம் வேண்டிப் பரமேச்வரனைப் பூஜித்து வந்தார். அவர் தினமும் பரமேச்வரனுடைய ஆயிரம் திருநாமாக்களை யும் கூறி ஆயிரம தாமரை மலர்களைக்கொண்டு பரமேசவர னுடைய பாதகமலஙகளைப்பூஜித்து வந்தார். இவ்வாறு நியமத்துடன் மஹாவிஷ்ணு பூஜை செய்துகொண்டு வருகையில ஒருநாள் ஓா மலர் குறைந்துவிட்டது 999 மலர்கள்தான் இருநதன. பூஜை நடுவில எழுந்து சென்று வேறு மலர் எடுததுவந்தால விரதபங்கம ஏறபடும ஆனலும் மஹாவிஷ்ணு மனந்தளராது தன்னுடைய தாமரைபோன்ற ஓர் கண்ணைப் பெயாதது எடுத்து அதையே ஓர் மலராக சிவபெருமானுடைய திருவடிகளில அாப்பணம் செயதாா. சிவபெருமானும் விஷ்ணுவின் பகதியை மெசசி அதை ஏற்றுககொணடாா அப்பொழுது அபபரமேசவரன் மஹாவிஷ்ணுவிறகுச சகரம என்ற ஆயுதத்தைத் தந்தருளி ஞர். அதன உதவியால மஹாவிஷ்ணு அஸுரர்கள் அனைவரையும் அழித்து மூவுலகையும காததாா அதனுல அவர் மூவுலகையும காக்கவல்லவர் என்ற புகழும் பெறருா. இதனுல எலலா உலகையும் காத்தருளும் மஹாவிஷ்ணுவும் பரமேசவரனுடைய க்ருபைககுப்பாதரமானவர். அவருடைய அருள் இருநதால நாம் வெறறிபெறமுடியும் என்பது நன்கு புலனுகின்றது. அவவாறு அருள்புரியும் அம்பிகையுடன் கூடிய பரமபொருளிடததில என் மனம் இன்புறறு இருக்கட்டும். (7)

शौरिं सत्यगिरं वराहवपुषं पादाम्बुजादर्शने
चक्रे यो दयया समस्तजगतां नाथं शिरोदर्शने ।
मिथ्यावाचमपूज्यमेव सततं हंसस्वरूपं विधिं
तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ८ ॥

ஶௌரிம் ஸத்யகிரம் வராஹ வபுஷம் பாதாம்புஜா தாஶநே
சக்ரே யே தயயா ஸமஸத ஜகதாம நாதம் ஶிரோதர்ஶநே ।

மித்யாவாசமபூஜ்யமேவ ஸததம் ஹம்ஸ ஸ்வரூபம் விதிம்
தஸமின் மே ஹருதயம் ஸுகேந ரமதாம ஸாமபே
பரப்ரஹ்மணி ||

यः-எநதப் பரமேசவரன் वराहवपुर्-பன்றியின் ரூபத்தை உடையவரும் पादाम्बुजादर्शने-தாமரைபோன்றதிருவடிகளைக் காணுத விஷயததில सत्यगिरं-உணமையாகப் பேசியவரு மான शौरिं மகாவிஷ்ணுவை दयया-தயவிஞல समस्तजगतां-எல்லா உலகஙகளுககும नाथं-தலைவஞக चक्रे-செயதாஞே शिरोदर्शने — தலையைக காணும விஷயததில मिथ्यावाचं-பொய வாாததை பேசியவரும हंसस्वरूपं-அன்னப் பறவையின ரூபத்தை உடையவருமான विधिं-நான்முகனை सततं—எபபொழுதும் अपूज्यमेव—பூஜிககத் தகாதவஞகவே चक्रे-செய்தாஞே तस्मिन्-அபபடிபபடட साम्बे - அமபிகை யுடன்கூடிய परब्रह्मणि-பரம் பொருளிடத்தில मे-என்னுடைய हृदयं-மனம सुखेन-ஸுகமாக रमताम्-விளையாடடடும்

ஒருசமயம நான்முகனும, பிரஹமாவும் நானே பெரியவன, நானே முதறகடவுள என்று வாதிடடுச சணடையிட்டனர். அவர்களுககு உண்மையை உணாததப் பரமேசன் அடியும் முடியும கணணுககுத் தெரியாத பெரிய ஜோதி வடிவாக அவாகள எதிரில தோன்றிஞர். இவருக்கு லிஙகோதபவ மூர்ததி என்று பெயா அவரை அவர்களால அறிநதுகொளள முடியவிலலை. இநத உருவததின் அடியையோ, முடியையோ தெரிந்துவருபவர்தான நமமுள பெரியவா என்று அவாகள தீாமானிததுக கொண்டனா. திருமால ஓர் பெரிய பனறியின் வடிவம தாங்கி நிலத்தைப் பிளந்துகொணடு கீழ உலகஙகள எஙகுஞ சென்ருா. அவர் நெடுங்காலம முயன்றும் அசசிவபெருமானின் அடியைக் காணமுடியவிலலை. பின்னா அவா திருமபி வநது தனஞல அடியைககாண முடியவிலலை என்ற உண்மையை வெளி யிட்டாா. நான்முகன் ஓா அன்னப்பறவையின் உருவந் தாங்கி உயரப் பறநது பல ஆணடுகள் தேடிஞன். ஆயினும் அவஞல அரவங்களை அணிகலஙகளாகக் கொண்ட பரமசிவனின் முடியைக் காண முடியவிலலை,

பின்பு அவன் அயர்ந்து முடியைக் காணுமலேயே திரும்பி வநதான். அவ்வாறு இருநதும நான் பரமேசவரனுடைய முடியைக கண்டுவிட்டேன். ஆதலால நானே முழு முதற கடவுள் என்று பொய் உரைததாா. அது கேட்டுச சினங கொணட சிவபெருமான் அவனை இகழநது இனி ஒருவரும் உன்னைப பூஜிக்கமாட்டாாகள் என்று கூறினுர் அது முதற் கொணடு நான்முகனுககு எங்கும் பூஜை இல்லாமல போய விட்டது. உண்மை உரைதத மஹா விஷ்ணுவை திரிலோக நாதனுகச செய்தாா. இவ்வாறு பரஹமா, விஷ்ணு இவா களாலும அறிய முடியாத உருவம் கொண்டவர் பரமேசன் அவாகளுககு நிகரஹானுகரஹங்கள செய்யும் சகதி வாயந தவர். அமபிகையுடன கூடிய அநதப பரமேசவரன் என் மனத்தில எபபொழுதும் பிரகாசிததுக கொண்டிருககட்டும் என்னுடைய மனம அப் பரமேசவரனிடம் இன்புற்று இருக்கட்டும். (8)

(அ) அஷ்டமூர்த்தி ஸவரூபத்தையும் துரீய ஸ்வரூபத் தையும காட்டுகிறுா:—

**यस्यासन्धरणीजलाग्निपवनव्योमार्कचन्द्रादयः**
**विख्यातास्तनवोऽष्टधा परिणता नान्यत्ततो वर्तते ।**
**ओंकारार्थविवेचिनी श्रुतिरियं चाचष्ट तुर्यं शिवं**
**तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ ९ ॥**

யஸ்யாஸன் தரணீ ஜலாகநி பவந வயோமாாக சந்த்ராதய:
விக்யாதாஸ்தநவோzஷ்டதா பரிணதா நாந்யத
ததோ வர்ததே ।
ஓம்காராாத்த விவேசிநீ ஶ்ருதிரியம் சாசஷ்ட துாயம் ஶிவம்
தஸ்மிந் மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே
பரப்ரஹ்மணி ॥

**यस्य**-எந்தப் பரமேச்வரனுக்கு **विख्याताः**-மிகுந்த புகழ் வாய்ந்த **धरणी**-பூமி **जल**-நீர் **अग्नि**-நெருப்பு **पवन**-காற்று **व्योम**-ஆகாயம் **अर्क**-சூரியன் **चन्द्रादयः**-சந்திரன் முதலியன

**अष्टधा**-எட்டு வகையாக **परिणताः**-அமைந்த **तनवः**-சரீரங் களாக **आसन्**-ஆயினவோ **ततः**-அவரைக் காட்டிலும் **अन्यत्**-வேறு ஒன்றும் **न वर्तते**-இல்லையோ **ओंकारार्थ**-ஓம் என்ற சொல்லின் பொருளை **विवेचिनी**-தெளிவாக விளக்கு கின்ற **इयं श्रुतिः**-இந்த வேதமும் எந்தப் பரமேசவரனை **तुर्यं शिवं च**-நான்காவது பொருள், சிவம் என்று **आचष्ट**-கூறிற்றோ **तस्मिन्**-அப்படிப்பட்ட **साम्बे**-அம்பிகையுடன் கூடிய **परब्रह्मणि**-பரமபொருளிடத்தில் **मे**-என்னுடைய **हृदयं**-மனம் **सुखेन**-ஸுகமாக **रमताम्**-விளையாடட்டும்

பரமேசவரன் எட்டு சரீரங்களையுடையவர். அவை முறையே நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம், கதிரவன், மதி, யஜமானன் என்பவை. பிரபஞ்சம் முழுவதும் இந்த எட்டுப்பொருள்களில் அடங்கிவிட்டபடியால் இவற்றைக் காட்டிலும் வேறானது உலகில் ஒன்றும் இல்லை. ஆகவே பிரபஞ்சம் முழுவதும் பகவானுடைய சரீரம் இந்த பிரபஞ்சத் திற்கு பரமாத்மாவே காரணமானபடியால் காரணத்தைக் காட்டிலும் காரியம் வேறல்ல என்ற நியாயப்படி பிரபஞ்சம் பரமாத்மாவைக் காட்டிலும் வேறல்ல. தோன்றுவது மாயை யால் தான். உண்மைப்பொருள் பரமாத்மா ஒன்றுதான். இதே கருத்தை பகவத்பாதாள் தக்ஷிணாமூர்த்யஷ்டகத்திலும்

भूरम्भांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांशुः पुमान्
इत्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम् ।
नान्यत्किञ्चन विद्यते विमृशतां यस्मात्परस्माद्विभोः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥

என்று காட்டுகிறார் இவ்வளவும் வியவஹார தசையில் கூறினோம். பரமார்த்த நிலையில் விசாரித்துப் பார்த்தோ மானால் பிரபஞ்சமே உண்மையில் கிடையாது. ஆகவே அதன் ஸம்பந்தமும் ஆத்மாவுக்கு இல்லை. பரமாத்மா துரீயமான (நான்காவது) பொருள். அதுவே சிவம் என்று ஓங்காரத்தின் பொருளை விளக்கவந்த மாண்டூக்ய உபநிஷத்

கூறுகிறது. அதாவது: ஸர்வபிரபஞ்சத்தையும் ஓங்கார ஸ்வரூபமாகவும் அதையே ப்ரஹ்மமாகவும் காட்டி, நமக்குப் புரிவதற்காக நான்காகப்பிரித்து வியஷ்டியில் ஜாக்ரத் வஸ்தையில் ஆத்மாவுக்கு விசுவன் என்றும் ஸ்வப்னவஸ்தையில் தைஜஸன் என்றும் ஸுஷுப்தி அவஸ்தையில் ப்ராஜ்ஞன் என்றும் பெயரும் லக்ஷணங்களும் கூறி இவ்வாறே ஸமஷ்டியில் பிரபஞ்சத்தையே சரீரமாகக் கொண்ட பரமாத்மாவுக்கும் வைச்வாநரன், ஹிரண்யகர்பன், ஸூத்ராத்மா என்ற பெயர்களையும் கூறி இரண்டு இடங்களிலும் துரீயமான (நான்காவதான) வஸ்து ஒன்றே தான் என்றும் அதுவே பரப்ரஹ்மம் என்றும் சிவம் என்றும் கூறியிருக்கிறது. ஆகையால் மாண்டூக்ய உபநிஷத்தில் ஓங்காரப் பொருளாகக் கூறப்பட்ட துரீயம் சிவன் தான். அந்த சிவனிடத்திலேயே என்மனம் நிலைத்து இன்பமடையட்டும். (9)

(அ) காலகூட விஷத்தைச் சாப்பிட்டு தேவர்களைக் காத்தருளிய லீலையைக் காட்டுகிறார் :—

विष्णुब्रह्मसुराधिपप्रभृतयः सर्वेऽपि देवा यदा
संभूताज्जलधेर्विषात्परिभवं प्राप्तास्तदा सत्वरम् ।
तानार्ताञ्शरणागतानिति सुरान्योऽरक्षदर्धक्षणा-
त्तस्मिन्मे हृदयं सुखेन रमतां साम्बे परब्रह्मणि ॥ १० ॥

விஷ்ணு ப்ரஹ்ம ஸுராதிபப்ரப்ருதய: ஸர்வேऽபி தேவா யதா
ஸம்பூதாத் ஜலதேர் விஷாத் பரிபவம் ப்ராப்தாஸ்ததா
ஸத்வரம் ।
தாநார்த்தாந் சரணாகதாநிதி ஸுராந்
யோऽரக்ஷதர் தக்ஷணாத்
தஸ்மின் மே ஹ்ருதயம் ஸுகேந ரமதாம் ஸாம்பே
பரப்ரஹ்மணி ॥

यदा—எப்பொழுது विष्णुब्रह्मसुराधिपप्रभृतयः — திருமால், நான்முகன், தேவேந்திரன் முதலிய **सर्वे देवाः अपि**—எல்லா

தேவர்களும்கூட **जलधेः**-ஸமுத்திரத்திலிருந்து **संभूतात्**-உண்டான **विषात्**-விஷத்திலிருந்து **परिभव**-பெரும் துன்பத்தை **प्राप्ताः**-அடைநதாாகளோ **तदा**-அப்பொழுது **सत्वरं**-உடனேயே **आर्तान्**-பீடிக்கப்பட்டவாகளும் **शरणा-गतान्**--தஞ்சமடைந்தவர்களுமான **तान्**--அந்த **सुरान्**-தேவர்களை **यः**-எந்த பரமேசவரன் **अर्धक्षणात्**-அரை விநாடியில **अरक्षत्**-காத்தருளினுரோ **तस्मिन्**-அபபடிப்பட்ட **साम्बे**-அம்பிகையுடன்கூடிய **परब्रह्मणि**-பரம்பொருளிடத்தில **मे हृदयं**-என்னுடைய மனம் **सुखेन**-ஸுகமாக **रमताम्**-விளையாடட்டும்

ஒருசமயம் அமுதத்தைப்பெற தேவர்களும் அஸுரர் களும் மநதரகிரியை மததாகவும் வாஸுகியைக கயிருகவும வைத்துககொண்டு பாற்கடலைக கடைநதனா. அப்பொழுது அதிலிருந்து முதலில கிளம்பிய காலகூடமென்ற விஷத்தை கண்டவுடனேயே உலகைப் படைத்த பிரஹ்மா, அதைக் காக்கும் பொறுப்புள்ள திருமால, தேவேநதிரன் முதலான தேவாகள் அனைவரும் அசசமடைநது நாறபுறங்களிலும ஓட ஆரம்பிததனர். எங்கும் பரவி வரும் விஷஜ்வாலையால துன்பமுறறவாகளாய் மஹாதேவனைச சரணமடைந்தனர். அவவாறு துயரமுற்றுத் தன்னைச சரணடைந்த தேவர் களிடம் பரிவுகொண்ட பரமேசவரன் அந்த ஹாலாஹல மென்ற விஷத்தைக கையில ஏந்தி அரைவிநாடியில் பருகி விட்டார் அவ்வாறு அவா அவ்விஷத்தைப பருகி தேவர்கள் அனைவரையும் காத்தருளினுா

இவ்வாறு பறபல தடவைகளில ப்ரஹமாதி தேவர் களுக்கும், உலகம் முழுவதற்குமே ஏறபடட பெரிய இன்னல் களைப் போக்கி பரமேசுவரன்தான் காப்பாற்றியிருக்கிருர். வேறு ஒருவராலும் நீகக முடியவிலலை. அவருடைய ஸவ ரூபததை அவா அருள இலலாவிட்டால பரஹ்மாதி தேவர் களும அறிந்துகொள்ள முடியாது. பிரபஞசம் முழுவதும் அவர் சரீரம் இவ்வாறு தியானம் செய்தால எலலா நன்மை களையும பெறலாம். ஆனுல உபநிஷததில் கூறப்பட்ட

பிரணவப் பொருளாயும் பிரபஞ்ச ஸம்பந்தமில்லாததும், மாயாதீதமானதும் துரீய சிவ ஸ்வரூபமானதுமான ஸச்சிதானந்தம்தான் அவருடைய உண்மை தத்வம். ஸாம்ப பரமேசுவரனை எபபொழுதும் தியானம் செய்து வந்தால அவர் அருளால ஸசசிதானந்த ஸவரூபமாக ஆகி பேரானந்தத்தை யடையலாம. (10)

தசச்லோகீஸ்துதி முற்றிற்று.



॥ श्रीः ॥

# ॥ श्लोकानुक्रमणिका ॥


| ஶ்லோகம் | பக்கம் | ஶ்லோகம் | பக்கம் |
|---|---|---|---|
| **अ** | | **ए** | |
| अक्षतैर्धवलैर्दिव्यैः | 90 | एकेन मुद्रां परशुं | 10 |
| अगौरगात्रैरललाट | 16 | एलाशुण्ठीसहितं | 102 |
| अत्यर्थं राजते या | 41 | **क** | |
| अद्राक्षमक्षीणदया | 3 | कण्ठाश्लेषार्थमाप्ता | 52 |
| अपारकारुण्यसुधा | 5 | कर्पूरचूर्णं कपिलाज्य | 95 |
| अस्तोकस्तोत्रशस्त्रैः | 62 | कलाभिरिन्दोरिव | 7 |
| **आ** | | कान्त्या निन्दितकुन्द | 15 |
| आकाशश्चिकुरायते | 127 | कुर्वन्निर्वाणमार्ग | 27 |
| आगत्य मृत्युञ्जय | 80 | कूश्माण्डवार्ताक | 98 |
| आत्मप्रेम्णा भवान्या | 47 | केवलमतिमाधुर्य | 99 |
| आनन्दायेन्दुकान्तो | 60 | कैलासे कमनीयरत्न | 79 |
| आनीतेनातिशुभ्रेण | 88 | क्रुध्यत्यद्धा ययोः स्वा | 37 |
| आरभ्य स्मरजयिनः | 75 | क्रुध्यद्गौरीप्रसादा | 29 |
| आलेपवन्तं मदनाङ्ग | 11 | **क्ष** | |
| **उ** | | क्षोणी यस्य रथो | 121 |
| उपासकाना त्वमुमा | 20 | **ख** | |
| उपासकानां यदुपासनीयं | 1 | खट्वाङ्गोदग्रपाणेः | 36 |
| उपासते यं मुनयः | 14 | **ग** | |

| ஶ்லோகம் | பக்கம் |
|---|---|
| गगनधुनीविमलजलैः | 105 |
| गजवदनस्कन्दधृते | 93 |
| गुडदधिसहितं | 85 |
| गोविन्दादधिकं न | 126 |
| **च** | |
| चण्डीवक्त्रार्पणेच्छोः | 35 |
| चतुश्चत्वारिंशद्विलस | 113 |
| चम्पकपङ्कजकुरवक | 91 |
| चारुस्मितं सोमकला | 13 |
| **ज** | |
| जगत्त्रयीख्यात | 87 |
| जम्बीरनीराञ्चित | 103 |
| **त** | |
| तत्त्वार्थमन्तेवसतां | 9 |
| **द** | |
| दीव्यन्मूर्धेन्दुखण्डः | 76 |
| देयासुर्मूर्ध्नि राज | 24 |
| दैवतानि कति सन्ति | 17 |
| **न** | |
| नमो गौरीशाय | 110 |
| नागररामठयुक्त | 103 |
| नानाहेमविचित्राणि | 88 |
| नीराजनं निर्मलदीप्ति | 107 |
| न्यक्कुर्वन्नुर्वराभृत् | 43 |

| ஶ்லோகம் | பக்கம் |
|---|---|
| पचाक्षशान्त पंचास्य | 86 |
| पदे पदे सर्वतमो | 109 |
| पुन्नागनीलोत्पल | 108 |
| पुन्नागमल्लिकाकुन्द | 106 |
| पुष्टावष्टम्भभूतौ | 58 |
| पृथुकुचभर | 74 |
| प्रह्वप्राचीनबर्हिः | 66 |
| प्रातर्लिङ्गमुमापतेः | 114 |
| प्रौढप्रेमाकुलाया | 51 |
| **भ** | |
| भासा यस्य त्रिलोकी | 44 |
| भास्वन्मौक्तिकतोरणे | 82 |
| भूत्यै दृग्भूतयोः | 31 |
| भूम्ना यस्यास्तसीम्ना | 71 |
| **म** | |
| मञ्जीरीभूतभोगि | 61 |
| मणिमुकुरे निष्पटले | 95 |
| मनोज्ञरम्भानव | 101 |
| मन्दारमल्लीकरवीर | 83 |
| मन्दारहेमाम्बुज | 104 |
| ममाद्य देवो वटमूल | 6 |
| माणिक्यकेयूरकिरीट | 92 |
| माणिक्यपादुकाद्वन्द्वे | 91 |

| சுலோகம் | பக்கம் |
|---|---|
| मुक्तातपत्रं शशिकोटि | 94 |
| मुक्तामुक्ते विचित्रा | 55 |
| मुदिताय मुग्धशशिना | 18 |
| मौक्तिकचूर्णसमेतैः | 106 |
| **य** | |
| यस्ते प्रसन्नामनुस | 21 |
| यस्यासन्धरणीजला | 132 |
| याः स्वस्यैकांशपाता | 64 |
| युग्मे रुक्माब्जपिङ्गे | 32 |
| येनापादितमङ्गजाङ्ग | 124 |
| येषां रागादिदोष | 69 |
| यो भासा भात्युपान्त | 39 |
| **र** | |
| रक्षोवक्षोविफालं | 54 |
| रम्भाचूत | 100 |
| राजान्नं मधुरान्वितं | 97 |
| **व** | |
| वक्त्रेन्दोर्दन्तलक्ष्म्या | 49 |
| वर्तित्रयोपेतमखण्ड | 96 |
| विद्राविताशेषतमो | 4 |
| विरिञ्चिमुख्यामर | 107 |
| विशुद्धमुक्ताफल | 89 |

| சுலோகம் | பக்கம் |
|---|---|
| विष्णुब्रह्मसुराधिप | 134 |
| विष्णुर्यस्य सहस्रनाम | 129 |
| विष्ण्वाद्याश्च पुरत्रयं | 120 |
| वैयाघ्री यत्र कृत्तिः | 57 |
| व्यालम्बिनीभिः परितो | 20 |
| **श** | |
| शर्करामिलितं स्निग्धं | 99 |
| शीतलं मधुरं स्वच्छं | 98 |
| शौरिं सत्यगिरं | 130 |
| श्रीगन्धं घनसार | 89 |
| **स** | |
| संसारे जनिताप | 111 |
| सत्याः सत्याननेन्दा | 67 |
| सद्योजाताख्यमास्यं | 46 |
| साम्बो नः कुलदैवतं | 116 |
| सुगन्धिपुष्पप्रकरैः | 84 |
| सुहितगिरिसुताभ्यः | 73 |
| सौधे रत्नमये | 112 |
| स्वदक्षजानुस्थित | 8 |
| **ह** | |
| हिंगूजीरकसहितं | 102 |
| हिमाम्बुवासितैस्तोयैः | 85 |